# கல்கி

## பொருளடக்கம்



**சௌமிய, மாசி. 11 - 1970, பிப்ரவரி 22**



அட்டையில்:

**விண்வெளிக்கே பறந்து போக உத்தேசமோ?**

வண்ணப் படம்: உதயபாஸ்கர்

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20 | ரூ. 10 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21 | ரூ. 10/50 |
| இதர நாடுகள் | ரூ. 40 | ரூ. 20 |

"ராஜிநாமா செய்க"

"இந்தியா பூரணமாகக் கெட்டுப் போகும் வரை இருக்கிறேனே!"

உயர்நீதி மன்றத் தீர்ப்பு

வாஜ்பாய்

SAMA

மக்களின் ஜீவாதார உரிமைகளை எதேச்சாதிகாரக் கொள்ளைக்காரனிடமிருந்து காப்பாற்றவே, சாஸனத்தில் சட்டதிட்டங்கள் என்னும் பூட்டுக்களை ஜனநாயகம் ஏற்படுத்தியுள்ளது.





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 29 □ இதழ் 30

# பாங்குகள் பிரச்னை

**பா**ங்கு அரசுடைமைச் சட்டம் செல்லத் தக்கது அல்ல என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு அளித்துள்ளது. அதற்குப் பத்து நீதிபதிகள் சாதகம்; ஒருவர் பாதகம். சுப்ரீம் கோர்ட்டுதான் தேசத்தின் முதன்மையான நீதிமன்றம். அதனிடமிருந்து இம்மாதிரி ஒரு தாக்குதல் சர்க்காருக்குக் கிடைத்திருப்பது சாலவும் பொருந்தும். ஸ்ரீமதி இந்திரா காந்தியும், அவரைச் சார்ந்தவர்களும் இத்தகைய அநுபவத்துக்கு முற்றிலும் உரியவர்கள். ஏற்கனவே தம் பதவியைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் பிரதம மந்திரி ஒரு போராட்டத்தில் ஈடுபட்டுள்ளார். யூனியன் சர்க்காரது மதிப்பு குறைவாகவே இருந்து வருகிறது. சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பு அதை மேலும் மட்டம் தட்டியுள்ளது.

விவகாரம் கோர்ட்டிலிருந்தபோது ரிசர்வ் பாங்கு முன்ஜாக்கிரதையுடன் வழிவழியான நடைமுறைகளையும், மரபுகளையும் சிரத்தையுடன் பின்பற்றி பாங்குகளின் நிர்வாகத்தை நன்றாக நடத்தி வந்திருக்கிறது. நிச்சயமற்ற நிலைமை இருந்தும் கூட பாங்குகள் சிதறுண்டு போகாமல் அது கட்டிக் காத்து வந்திருக்கிறது. இப்பொழுது சட்ட இலாகா தரக் கூடிய தகுதியற்ற, சரட்டான யோசனையின் பேரில், எல்லாவிதமான உபாயங்களையும் கையாண்டு, தமது கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளப் பிரதம மந்திரி முயல்வார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சுப்ரீம் கோர்ட் தீர்ப்பின் பகுதிகளைப் பத்திரிகைகள் எடுத்து நீளமாகப் பிரசுரித்துள்ளன. மேற்கொண்டு என்ன நடைபெறக் கூடும் என்பதைப் பற்றி அவை எழுதியுள்ள ஹேஷ்யங்கள் இன்னும் நீளமானவை. ஆனால் நான் இந்த விவகாரம் கிளம்பியபோது போட்ட முதல் கேள்விக்கு இன்னும் விடை கிடைத்தாகவில்லை. டிபாசிட் செய்தவர்கள் தமது பணத்தை ஏ, அல்லது பி அல்லது சி என்று பெயர் கொண்ட பாங்கிடம் ஒப்படைக்கிறார்கள். அரசாங்கம் அந்த ஏ, பி, சி ஆகியோரை விலக்கி விட்டுத் தன்னைத் தானே டிபாஸிட்டர்களின் நிதிகளுக்குப் பொறுப்பாளியாக்கிக் கொள்ளலாமா? பணத்தை ஒப்படைத்தவர்களுடைய சம்மதமில்லாமல் வலுக் கட்டாயமாக அவற்றை எடுத்துக் கொள்ளலாமா? இதுதான் கேள்வி. என்னுடைய கேள்வியில் குறை எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இதைப் பற்றி இதுவரை சர்ச்சை நடைபெறவில்லை. எனது கேள்விக்குப் பதிலும் இதுவரை கிடைக்கவில்லை. கோர்ட்டின் முடிவு ஒருபுறம் இருக்கட்டும். சர்க்கார் புதிதாக அவசரச் சட்டத்தைக் கொண்டு வரலாம். தொடர்ந்து சட்டத்தை நிறைவேற்றியும் வைக்கலாம். * அவ்வாறு நடந்தாலும் கூட, விவகாரம் தீர்ந்துவிட்டது என்று முடிவு கட்டுவதற்கு முன், நான் எழுப்பியுள்ள கேள்விக்குப் பதில் கூறித்தான் ஆக வேண்டும்.

சுப்ரீம் கோர்ட் அளித்த தீர்ப்பின் மீது பிப்ரவரி 11ந் தேதியன்று 'ஹிந்து' ஒரு தலையங்கம் எழுதியிருக்கிறது. அதில் சர்க்காரை எச்சரிக்கின்ற வகையில் அது விவேகத்துடன் வழங்கியுள்ள கருத்து பின்வருமாறு:

> "இழந்து விட்ட தன் மதிப்பை மீட்டுக் கொள்ளும் நோக்கத்துடன் மேல் நடவடிக்கைகளில் சர்க்கார் இறங்கக் கூடும். அதற்கு முன், விசேஷ ஜாக்கிரதையுடன் கூட, சுப்ரீம் கோர்ட் அளித்துள்ள தீர்ப்பின் முழுப் பொருளையும், விளைவுகளையும் அது ஆராய்ந்து தெளிய வேண்டும். இல்லாவிடில் மீண்டும் தவறிழைப் பதில்தான் அது கொண்டு போய் விடும். செல்லாது என்று அறிவிக்கப்பட்ட சட்டத்தில் உள்ள 'பொத்தல்'களை அடைக்கின்ற முயற்சியானது, வேறு பல சிக்கல்களில் கொண்டு போய்விடும். அதன் விளைவுகள் ராஜீய, பொருளாதார நிலைமைகளைக் கடுமையாகப் பாதிக்கத்தான் செய்யும்."

ஸ்ரீமதி இந்திரா காந்தி தமது தந்தை வகித்த பதவிக்கு வாரிசாக வந்திருக்

---

* இந்த இதழ் அச்சேறும் தருவாயில் பாங்குகள் மீண்டும் அரசுடைமையாக்கப்பட்டதாக அவசரப் பிரகடனம் வெளியாகி இருக்கிறது.

கிறார். இத்தகைய நிர்ப்பந்த நிலைகள் ஏற்பட்ட போதெல்லாம் எப்பொழுதும் நேருஜி விசேஷ முன்ஜாக்கிரதையுடன் நடந்து கொண்டிருக்கிறார். அவரது அந்த விவேகத்தில் ஒரு பகுதிக்காவது ஸ்ரீமதி இந்திரா காந்தி வாரிசாக இருக்க வேண்டாமா?

★

தொழில் துறையில் நமக்கு இப்போது தேவை நல்ல நிருவாகமே அன்றி பிரும்மாண்டமான அமைப்புக்கள் அல்ல. நல்ல நிருவாகத்தின் ரகசியம் ஒரு தொழிலில் பல நிறுவனங்கள் இருந்து, அவை லாபம் எடுப்பதிலும், நற்பெயர் எடுப்பதிலும் பரஸ்பரம் போட்டியிடுவதுதான். எந்த இனத்திலுமே ஏகபோக்கியம் ஏற்படுவதால் நாட்டு மக்களுக்குக் கெடுதல்தான் விளையும். இந்த விதிக்குப் பாங்குத் தொழில் விலக்கு அல்ல. பாங்குகளை சர்க்காரின் உடைமையாக்குவது மிக மோசமான ஏகபோக்கியமேயாகும்.

பாங்குத் தொழிலில் நிலைத்துள்ள மரபு யாதெனில், அதில் பணம் போடுபவர்களின் விவகாரங்களை வெளியிடாமல் காப்பதே யாகும். சர்க்காரின் உடைமையாக்குவதால் இந்த அம்சத்தை அடியோடு இழந்தாக வேண்டியிருக்கும்.

பாங்குகளை அரசாங்க உடைமையாக்குவதால் நாட்டுக்கு ஏற்படும் லாபம் என்னவென்று இதுவரை எவரும் சொல்லக் காணோம். பாங்கு நிர்வாகத்தில் பொறுப்பின்மையும், ஈடுபாடின்மையும் ஏற்படுவதை லாபங்களாகக் கருதினால்தான் சர்க்கார் உடைமையாக்குவதில் லாபம் இருப்பதாகக் கொள்ள இடமுண்டு.

★

இப்போது செய்ய வேண்டுவது யாதெனில் பாங்குகளைச் சர்க்கார் உடைமையாக்கிய குறிப்பிட்டதொரு சட்டத்தைப் பற்றி ஆராய்வது மட்டுமல்ல. மேற்படி சட்டம் எவ்விதத்தில் சாஸனத்தை மீறியது என்று ஆராய்ந்தாலோ, அவசரத்தில் புதிதாக அவசரச் சட்டம் போட்டு 'பொத்தல்'களை அடைத்தாலோ மட்டும் போதாது. 'பாங்குகளை அரசுடைமையாக்குவது' என்ற அடிப்படைக் கருத்தையே ஆராய்ந்து பார்ப்பது தான் இப்போது செய்ய வேண்டுவது. பாங்குத் துறையில் போட்டியைத் தவிர்த்து ஓர் ஏகபோக்கிய அமைப்பை அரசாங்கத்தின் கையில் ஒப்புவிப்பதால் மக்களுக்கு ஏற்படக் கூடிய விளைவு யாது என்ற அடிப்படையிலிருந்து சகல அம்சங்களையும் அரசாங்கமும் பார்லிமெண்டும் மீண்டும் பரிசீலிப்பதற்கு ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பு ஒரு வாய்ப்பை அளித்துள்ளது. சர்க்காரும் பார்லிமெண்டும் இவ்வாய்ப்பை விவேகமாக உபயோகப்படுத்திக் கொள்ளுமாக!

★

ஆட்சேபங்கள், வேலைநிறுத்தங்கள், ஆர்ப்பாட்டங்கள் முதலியவை மூலம், நிறுவன நிருவாகிகளை நிர்ப்பந்தித்து, தமது கோரிக்கைகளை வற்புறுத்துவதற்கான உரிமை, ஊழியர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் இருந்து வருகிறது. ஆனால் கோர்ட்டுகள் தமது நீதிமன்றப் பணியை ஆற்றுகையில் அவற்றை எதிர்த்து ஆட்சேப ஆர்ப்பாட்டங்களைச் செய்வது மரியாதைக் குறைவானது; தற்கொலை போன்றது. அப்படிச் செய்வது கோர்ட்டை அவமதிக்கும் குற்றம் என்று மதிக்கப் பெறாமல் இருக்கலாம். ஆனால் தொழிற் சங்க நிர்ப்பந்தங்களுக்கு சுப்ரீம் கோர்ட்டையோ ஹைகோர்ட்டுகளையோ இலக்குகளாக ஆக்குவது முறையற்ற செயல். குறிப்பாக, முழு சுதந்திரத்துடன் தன் பணியை ஆற்றுவதற்கு சுப்ரீம் கோர்ட்டுக்கு உள்ள சுதந்திரம் சிறிதும் பாதிக்கப்படலாகாது. 'வானே இடிந்து வீழ்ந்த போதிலும் நீதியை வழங்கியாக வேண்டும்' என்று பிரிட்டிஷ் சின்னத்தில் கொள்கை பொறிக்கப் பட்டிருக்கிறது. அந்த வகையில் நமது கோர்ட்டுகள் செயலாற்றும்படி விட வேண்டும்.

கோர்ட்டுகளை நிர்ப்பந்தித்தால் அவற்றின் சுதந்திரத் தன்மை குறைந்து போகிறது. அதன் விளைவாகத் தொழிற் சங்கங்கள், ஊழியர்கள், பிரஜைகள் ஆகிய எல்லோரின் நலன்களும் அடியோடு பாதிக்கப் பெறும். தொழிலாளர், ஊழியர், தொழிற் சங்கங்கள் உட்பட பிரஜைகளின் உரிமைகள் அனைத்தும் காப்பாற்றப்படுவதற்கு, கோர்ட்டுகள் எவ்வித நிர்ப்பந்தமும் இல்லாமல் செயலாற்றுகின்ற நிலைமை உறுதிப்பட வேண்டும். இது மிக அவசியமான நிபந்தனை.

**('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)**

# என்ன சேதி?

## ஆதிமூலம் மறைவு

சுதந்திரக் கட்சிக்கு ஒரு பெரு நஷ்டம் விளைந்துள்ளது. கட்சிக் கொள்கைகளிலும், ராஜாஜியிடமும் அபரிமிதமான பற்றுக் கொண்டிருந்த திரு டி. எஸ். ஆதிமூலம் எம். எல். ஏ. அவர்கள் சென்ற 9ம் தேதி மதுரை ஆஸ்பத்திரியில் காலமானார் என்ற செய்தி கேட்டுத் துணுக்குற்றோம். அம்பாசமுத்திரம் தொகுதி மக்களின் பிரதிநிதியாகச் சென்னை சட்டசபையில் சிறப்புப் பணி ஆற்றியிருக்கிறார். அவர் சட்டசபையில் பேச எழும்போதெல்லாம் எல்லாக் கட்சி மக்களும் மிக ஆர்வத்தோடு கேட்பார்கள். ஏனெனில், அவர் பேச்சில் உண்மையும், ஹாஸ்யமும், வேகமும் கலந்து மிளிரும். மனத்தில் பட்டதை அஞ்சாமல் சொல்லக் கூடிய தீரர். ஒரு காலத்தில் பெரும் செல்வம் ஈட்டினார். வரையாது வழங்கும் வள்ளலாக விளங்கிப் பல நல்ல பணிகளுக்கு உதவினார். இளமை முதலே தீவிர தேச பக்தராக விளங்கினார். நாடார் சமூகத்தின் காவலராக அரும்

பணியாற்றி 'யிருக்கிறார். அவரது குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## ஓர் அரிய வாய்ப்பு

மத்திய அரசைப் பாராட்டக்கூடிய சமயமும் சந்தர்ப்பமும் வாய்ப்பது நாளுக்கு நாள் அரிதாகி வருகிறது. இந்நிலையில் அத்தி பூத்தாற்போல் ஏதாகிலும் ஒரு வாய்ப்புக் கிடைத்தால் அதைநழுவ விட மனம் வரவில்லை.

விசைத் தறிக்காரர்களிடமிருந்து எவ்வளவோ பலத்த எதிர்ப்பு வந்தும், விட்டுக் கொடுக்காமல் வண்ணச் சேலைகளைத் தயாரிக்கும் முழு உரிமையும் கைத்தறி நெசவுக்கே ஒதுக்குவது என்று மத்திய அரசு கண்டிப்பாகத் தீர்மானித்து விட்டது என்று ஒரு செய்தி கூறுகிறது.

விவசாயத்துக்கு அடுத்தபடி இந்த ஏழை நாட்டில் பெருவாரியான மக்கள் ஈடுபட்டிருக்கும் தொழில், கைத்தறி நெசவுத் தொழில். இந்த நெசவாளர்களுடன் மில்களும், விசைத்தறிகளும் போட்டியிட்டால், கைத்தறி நெசவாளி மிக மிக கஷ்டப்பட வேண்டியதாகிறது. இந்நிலையில் வண்ணச் சேலைகளைத் தயாரிக்கும் முழு உரிமையும் கைத்தறி நெசவுக்கே தர மத்தியஆட்சி முடிவு எடுக்குமாயின் லட்சோப லட்சம் கைத்தறி நெசவாளர் வயிற்றில் பால் வார்த்ததாகும்.

## பி. சோ.வின் முடிவு

கம்யூனிஸ்ட் கட்சி ஆரம்பிக்கும் போராட்டங்களில் பிரஜா சோஷலிஸ்ட் கட்சி உதவப் போவதாகவும், அவற்றில் கலந்து கொள்ளப் போவதாகவும் ஒரு செய்தி வெளியாகியிருக்கிறது.

சென்ற பதினேந்தாண்டுகளாக கம்யூனிஸ்ட் கட்சியைக் கடுமையாகத் தாக்கி வந்த பி. சோ. கட்சிக்கு இப்போது என்ன வந்து விட்டது என்று தெரியவில்லை.

வங்கத்தில் நிலவும் நிலையைப் பார்த்தபிறகு பாரத நாட்டுப் பொதுமக்களிடை கம்யூனிஸ்ட் கட்சி தனது செல்வாக்கை இழந்து நிற்கிறது. இந்த நிலையில் பி. சோ. கட்சி கம்யூனிஸ்ட் கட்சிக்குத் துணை போவானேன் என்று தெரியவில்லை.

## வர்த்தக சபைத் தலைவர்

நடப்பு ஆண்டாகிய 1970–71க்கு இந்தியத் தொழில் வர்த்தகசபை, தமிழ் நாட்டுப் பிரபல தொழிலதிபர் ஸ்ரீ தயானந்த் சந்துலால் கோத்தாரியைத் தலைவராகத் தேர்ந்தெடுத்திருக்கிறது.

"டி. வி." என்று பரிவுடன் தமிழகத்தில் மட்டுமன்றி, வடநாட்டுத் தொழில் பிரமுகர்களிடையேயும் அறிமுகமாகியுள்ள ஸ்ரீ கோத்தாரி, பரந்த தொழில் அநுபவம் உள்ளவர். வெளிநாடுகளுக்குச் சென்று வந்திருப்பவர். இந்தியாவின் பிரதிநிதியாக உலகச் சர்க்கரை மகாநாட்டில் கலந்துகொண்டு நம் நாட்டுத் தொழிலுக்காக வாதாடியுள்ளார். பெயரைப் பார்த்தால் வடநாட்டைச் சேர்ந்தவர் போல் இருந்தாலும், அவருடைய தொழில் அநுபவமும், அக்கறைகளும் பெரிதும் தென்னாட்டிலேயேதான் உள்ளன என்பதைச் சுட்டிக் காட்ட வேண்டும். தமது தகப்பனார் ஸ்ரீ வி. எம். கோத்தாரி காலத்திலிருந்தே அவர் சென்னைவாசி. படித்ததும் சென்னை கிறிஸ்துவக் கல்லூரியில்தான். ஆகவே, தமிழருக்கு உயர் கௌரவம் கிடைத்தால் தமிழ் மக்கள் மகிழ்ச்சி அடைவது போலவே, திரு டி. வி. அடைந்துள்ள கௌரவத்தைப் பாராட்டுகிறோம். மற்றொரு



டி. வி. கோத்தாரி

விசேஷம் என்னவென்றால், அவருடைய காலத்தில் டி. வி. யின் தகப்பனாரும் இந்தியத் தொழில் வர்த்தக சபையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் புகழ் அடைந்தவர்.

வேகமாக மாறிக் கொண்டு வரும் சூழ்நிலையில் தனியார்த் தொழிலுக்காக வாதாடி வெற்றிபெற விசேஷத் திறமை வேண்டும். அத்தகுதியை அநுபவம் மூலம் பெற்றுள்ளவர் டி. வி. அவருடைய பதவி காலம் இந்தியத் தொழில்களுக்குப் பொற்காலமாக விளங்குவதாக.

## வடுவூர் திருப்பணி

தர்ம மூர்த்தியான ராமன் அழகு மூர்த்தியாகக் கோதண்டராமன் என்கிற திருநாமத்துடன் வடுவூரில் கோயில் கொண்டு அருள் புரிந்து வருகிறான். தஞ்சை மாவட்டத்தில் மன்னார்குடி சமீபத்தில் உள்ள இந்தப் பிரசித்தமான ஆலயம் மிகவும் பழுதுபட்டு இப்போது பல பக்தர்களின் உதவியுடன் புதுப்பிக்கப்பட்டு வருகிறது. இந்த உத்தமப் பணி நிறைவுபெற ஒரு லக்ஷ ரூபாய்க்குமேல் தேவைப்படுகிறது. அன்பர்கள் தம்மால் இயன்ற அளவு பொருளுதவியைக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி வைக்கக் கோருகிறோம்: தலைவர், ஸ்ரீ கோதண்ட ராமஸ்வாமி திருப்பணிக் கமிட்டி, வடுவூர், தஞ்சை மாவட்டம்.




உத்தரப் பிரதேசத்தை வெல்வதற்குப் பிரதமர் போட்ட தந்திரம், அநுபவஸ்தரான ஸ்ரீ ஸி. பி. குப்தா வைராக்கியத்துடன் ஓர் அடி கொடுத்ததால் முறியடிக்கப்பட்டு விட்டது. தற்போதைக்கு இது இந்தியாவில் யதேச்சாதிகாரத் தீமையைத் தள்ளிப் போடும் ஓர் அம்சமாகும்.

★

கிராமத்தில் அவமானமடைந்த பலவீன மனிதன் தன் பெண்டாட்டியைப் போட்டு அடிப்பான். இதனால் தனக்கு மரியாதை ஏற்படுத்திக் கொண்டதாக அவனுக்குப் பிரமை ஏற்படும். இப்போது அவமானத்துக்கு ஆளாகியுள்ள அரசாங்கம் முன்னாள் மன்னர்களுக்குத் தந்த உறுதிமொழியை முறிக்க உக்கிரமாக விரைவுபடுவது, அவமானப்பட்டதற்குப் 'பரிகாரமாக' மனைவியை அடிப்பது போன்றதே.

★

என்னோடு சமீபத்தில் உரையாடிக்கொண்டிருந்த பிரமுகர் ஒருவர், மக்களைக் கடுமையாக உழைக்குமாறு செய்வதற்கு ஊக்கம் தரவேண்டும் என்றார்.

"அது சரி, ஏறக்குறைய நம் நாட்டின் எல்லா ராஜ்ய சர்க்கார்களும் லாட்டரிகள் நடத்தி, பெரிதாக விளம்பரம் செய்கிறார்களே, அதற்கு என்ன சொல்கிறீர்கள்?" என்று அவரைக் கேட்டேன்.

அவரும் அவருடன் வந்தவர்களும் குபீரென்று சிரித்தார்கள்.

லட்சோப லட்சம் நபர்களில் தனக்கே அதிருஷ்டம் அடிக்கக்கூடும் என்ற மூட நம்பிக்கையில் மக்களின் மனத்தைத் திருப்பி, உழைப்பின் அவசியத்தை அவர்களுடைய எண்ணத்திலிருந்து அகற்றும் தீமை தேசமெங்கணும் வியாபித்து விட்டது. ரூபாய்க்கு மதிப்புக் குறைந்து விட்டதால், ஏழைகளும் ரூபாயை எளிதில் விட்டெறிந்து, 'ஒரு வாய்ப்புப் பார்க்கலாமே' என எண்ணுகின்றனர். ஆனால், மக்கள் பணத்தை இழப்பதைவிட இதில் பயங்கரமான துரதிருஷ்டம் யாதெனில் அவர்களது மனப் போக்கு தவறான திசையில் பயிலுவிக்கப்படுவதேயாகும். இதை யாரும் கவனித்ததாகக் காணோம். இது போகிற போக்கைப் பார்த்தால், என்றோ ஒரு நாள் அரசாங்க லாட்டரிகள் நிறுத்தப்பட்டாலும் கூட, அதன் பின்னும் மக்கள் வேறு விதமான சூதாட்டங்களில் ஈடுபடக் கூடிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

★

அரசியல் சாஸனம் ராஷ்டிரபதிக்குத் தந்துள்ள அதிகாரத்தின் கீழ், அவர் லாட்டரிப் பிரச்னையை ஸுப்ரீம் கோர்ட்டின் கவனத்துக்குக் கொண்டு வரலாம். அவர் இவ்வாறு செய்வதற்கு எவ்விதத்திலேனும் அவரை ஊக்கினும் ஸுப்ரீம் கோர்ட்டின் முடிவு எப்படி இருக்கும் என்று நிச்சயமாக அநுமானிக்கிறேன். 'லாட்டரி நடத்துவது வியாபாரம் செய்வதன் கீழ் வராது; வருமானத்துக்காக ராஜ்ய அரசாங்கங்கள் லாட்டரி நடத்த அவற்றுக்கு அதிகாரம் இல்லை' என்றே ஸுப்ரீம் கோர்ட் புத்திமதி கூறும் என திடமாகக் கருதுகிறேன். லாட்டரி பிரச்னையில் சர்க்காரின் உத்தரவு எதுவும் இல்லை. எனவே இதில் ஸுப்ரீம் கோர்ட் கருத்தை அறிய ராஷ்டிரபதி சொந்த ஹோதாவிலேயே நடவடிக்கை எடுக்கலாம். இதற்கு மந்திரி சபை அவருக்கு யோசனை கூற வேண்டும் என்கிற அவசியமில்லை.

★

அழுத்தமாகக் கூறவேண்டிய ஒரு விஷயத்தை வாசகர் முன் வைக்கிறேன்:

> அரசியல் நிர்ணய சபையில் கூடி விவாதித்த தலைவர்கள் நாட்டில் பொது க்ஷேமத்தை உண்டாக்குவதற்காகத் தந்த மகத்தான கருவி நமது அரசியல் சாஸனம். முதலில் வகுக்கப்பட்டபோது சாஸனம் எப்படி இருந்தது என்பதை இன்றும் காணலாம். அதன் நோக்கம் என்ன, உட்கிடை என்ன என்பதை எல்லாம் பட்சபாதமற்ற அரசியல்வாதி எவரும் தெளிவாக அநுமானிக்கலாம். மக்களுக்கு க்ஷேமம் உண்டாக்கும் அரசாங்கத்தை வளர்ப்பதே சாஸனத்தின் நோக்கம் என்பது தெளிவு. இப்படிப்பட்ட நிலைக்குத் தனிமனிதனின் அடிப்படை உரிமைகள் அத்தியாவசியம் என்பதாலேயே சாஸனத்தில் எடுத்தவுடன் அடிப்படை உரிமைகள் கூறப்படுகின்றன. இந்த உரிமைகள் சுதந்திரமான பொருளாதாரத்துக்கு ஜீவாதாரமாக இருக்கின்றன. இவையே அரசியல் சாஸனகர்த்தர்கள் நம் நாட்டில் நிலைநாட்ட விரும்பிய ஜனநாயகத்துக்கும் பலமான அடிப்படையாக உள்ளன.

★

முன்பு யூனியன் சட்ட மந்திரியாக இருந்த ஸ்ரீ ஏ. கே. ஸென் சமீபத்தில் அகமதாபாத்தில் பின்வருமாறு கூறியுள்ளார்: "அரசியல் சாஸனம் உறுதிகூறும் அடிப்படை உரிமைகளைச் சிறிது நலிவுறச் செய்தாலும் ஜனநாயக அமைப்பு சிதைந்து விழத் தொடங்கி, நாடு யதேச்சாதிகாரத் திசைக்குத் திருப்பப்படும். வேறு ஏதோ ஓர் அந்நியக் கொள்கையிடம் வெறியாக மோகித்திருப்பவர் தவிர, மற்ற இந்தியர்கள் அனைவரும் இந்த அடிப்படை உரிமைகளையே பற்றி இருப்போராவர்.

பார்லிமெண்டோ, ராஜ்ய சபைகளோ சாஸனத்தின் ஆணையை மறுக்க முடியாது. நமது சாஸனத்தின் அடிப்படை யாதெனில், சர்க்காருக்குப் பூரண அதிகார உரிமை தராமல் அதைச் சட்ட சபைக்குக் கட்டுப்பட்டதாக வைத்திருப்பதும், மேற்படி சட்ட சபையைச் சுதந்திரமான நீதி மன்றங்களுக்குக் கட்டுப்பட்டதாக வைத்திருப்பதுமேயாகும்.''

★

சுதந்திரக் கட்சி முதலாளிகளின் சார்பு கொண்டது என்று ஸ்ரீமதி இந்திரா காந்தி கூறுகிறார். 'முதலீடு செய்வோரை ஆதரிப்பவர்கள்' என்பது ஒரு வசைச் சொல் என்று அவர் நினைத்திருக்கக் கூடும். அப்படியானால் அதை விவாதித்துப் பயனில்லை. ஏழை மக்களின் மேம்பாடு உட்பட, பொது நலன் கைகூடச் செய்வதற்கு விரைவாக, போதிய அளவில் உற்பத்தியைப் பெருக்க வேண்டும்; அதற்கான விடுமுதல் கிடைத்தாக வேண்டும் என்று சுதந்திரக் கட்சி நம்புகிறது. இது முதலாளிச் சார்பு ஆகுமாயின் சுதந்திரக் கட்சி பிரதமரின் குற்றச்சாட்டை ஒப்புக் கொண்டு ஒரு புகாரையும் தாக்கல் செய்யலாம். அதாவது தேசத்தின் வளர்ச்சி விஷயத்தில் உள்ள சிரமங்களைப் பற்றிப் பிரதம மந்திரிக்குப் போதிய விஷய ஞானம் இருப்பதாகத் தெரியவில்லை என்று சுதந்திரக் கட்சி புகார் கூறலாம். கடுமையான உழைப்பும் போதிய விடுமுதலும் கைகூடவேண்டுமாயின், சம்பந்தப்பட்டோருக்குப் பலவிதத்தில் ஊக்கங்களை அளித்தாக வேண்டும். விரைவில் போதிய அளவு உற்பத்தி கைகூடி, தொடர்ந்து அதே மாதிரி நடந்து வர வேண்டுமாயின் இந்த ஊக்கங்களைத் தொடர்ந்து அளித்து வரவேண்டும். இந்த ஊக்கங்களைத் தகர்க்கின்ற திட்டங்களையோ சித்தாந்தங்களையோ சுதந்திரக் கட்சி அங்கீகரிக்கவில்லை.

★

'நம்மைப் போலவே செடி கொடிகளும் விருட்சங்களும் உயிர் படைத்தவை. எனவே அவற்றை இம்சிக்கலாகாது' என நமது ரிஷிகள் கூறினர். ஹிந்துப் பண்பாட்டின் ஓர் அம்சமாகிவிட்ட இதனைச் சமணர்கள் விசேஷமாக அப்பியசிக்கின்றனர். இதைத் தவிர, தாவர வர்க்கத்துக்குத் தீங்கு செய்யாதிருக்க இன்னொரு காரணமும் உண்டு. மனிதர்களும் விலங்குகளும் சுவாசத்தில் கரியமில வாயுவை நிறைய வெளிவிடுகின்றனர். இந்தக் கரியமில வாயுவைத் தாவர உலகம் உட்கொள்கிறது. பிரதியாகப் பிராண வாயுவை வெளி விடுகிறது. இவ்வாறாகச் சூழலில் பிராண வாயு — கரியமில வாயு விகிதாசாரம் நிலைகுலையாமல் காப்பாற்றப்படுகிறது.

மனிதர்களின் வெளிச் சுவாசம் போதாதென்று இப்போது நமக்கு ஒரே சமயத்தில் உபகாரமாகவும் அபகாரமாகவும் அமைந்துள்ள இயந்திரங்கள் வேறு நிறைய பிராண வாயுவை உட்கொண்டு கரியமிலவாயுப் புகையை வெளிவிடுகின்றன. சூழ்நிலை இதனாலும் மிகவும் பாதிக்கப்படுகிறது. நமது தொழில் 'முன்னேற்றத்தாலும்', 'நாகரிகத்தாலும்' இயற்கை விதித்த சமநிலை இவ்விதம் பாதிக்கப்படுகிறது. இது போதாதென்று மரங்கள் வெட்டப்படுகின்றன. நமக்காக மட்டும் வாழாமல் எதிர்காலத் தலைமுறை பற்றி நமக்குள்ள பொறுப்பைச் சற்றேனும் உணர்ந்தோமாயின், தாவர உலகை வளர்ச்சியுறச் செய்து நம் கடமையைச் செய்தவராவோம்.

★

காந்தி நினைவு நிதியைக் கொண்டு காந்திஜியின் பெயரில் கடவுளின் சேவகர்களாகத் தொண்டு புரிவோரைக் கொண்ட 'காந்தி இதம்தர்' இயக்கம் ஒன்று நிறுவப்பட வேண்டும். அது ஆண்டவனிடம் நம்பிக்கையுடன் எல்லா விதங்களிலும் நாட்டுக்குப் பணிபுரிய வேண்டும். காந்தி நினைவு நிதியை ஈடுபடுத்த இதைவிடச் சிறந்த உபாயம் இராது என்பதே என் கருத்து. இவ்வித இயக்கம் ஏற்படுத்துவதைவிட, காந்திக்கு நம் நன்றியைத் தெரிவிக்கக் கூடிய சிறந்த ஞாபகார்த்தம் இருக்க முடியாது. அதன் அங்கத்தினர்கள் பிரம்மசரியத்தையும், சத்தியத்தையும், அஹிம்சையையும் வெகு கண்டிப்புடன் பின்பற்ற வேண்டும். அங்கத்தினர்கள் மேற்சொன்ன பண்புகளை — நிறுவனத்தின் முடிவுப்படி — ஆயுட்காலம் முழுவதுமோ அல்லது இருபதாண்டுகளுக்கோ அநுசரிப்பதாகப் பிரதிக்ஞை பூண வேண்டும்.

★

பார்லிமெண்டில் இரண்டு ஆட்சிக்காலம் செயலூக்கத்துடன் அங்கத்தினராக இருந்து வந்த ஸ்ரீ சி. ஆர். நரஸிம்மன் எழுதியுள்ள பின்வரும் கடிதம் பத்திரிகையில் பிரசுரமாகியுள்ளது:

> ஆரம்பத்திலிருந்தே ஆட்சேபத்துக்கு ஆஸ்பதமானது என்று தோன்றும் விஷயமாக—சாஸனப்படி செல்லுமா என்பது சந்தேகத்துக்குரியதாக இருக்கும் விஷயமாக—மத்திய சர்க்கார் சட்டம் இயற்றும் போக்கைக் காண்கிறோம். இவ்விஷயத்தில் அதிகாரிகள் முன்கூட்டியே மந்திரிமாருக்கு உரிய ஆலோசனை கூற வேண்டும். சட்டங்கள் அரசியல் சாஸனப்படி செல்லுமா என்று பரிசீலிக்கப் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் பொறுப்புப் பெற்றிருக்கின்றனர். மசோதா சட்டமாகுமுன் பார்லிமெண்டில் மும்முறை விவாதத்துக்கு வரும்போது ஒரு கட்டத்தில் ஒழுங்குபடுத்த வேண்டிய அம்சங்களை எடுத்துக்காட்டி, திருப்திகரமான முடிவுகள் காண வேண்டும்.

அவசரப் பிரகடனம் ஒன்றை எழுதி அதற்கு ராஷ்டிரபதியின் ரப்பர் ஸ்டாம்பு முத்திரையைப் பெற்று விடுவது சுலபம். ஆனால் மக்களது உரிமையைப் பறிக்கும் ஒரு சட்டத்தை சாஸனத்துக்கு இணங்க நீதி நிபுணர்களின் அங்கீகாரம் பெறும் வகையில் தயாரிப்பது கஷ்டம். இயற்றப்படும் சட்டம் நாட்டுக்கு கணிசமான அளவுக்கு நன்மைப் பயப்பதாக இருக்கவேண்டுமேயன்றி பிரதமரின் சுய கௌரவத்தைக் காக்க உருவானதாக இருக்கக் கூடாது.

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**



## இருபத்தாறும் அத்தியாயம்

# அநிருத்தரின் பிரார்த்தனை

முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் வீற்றிருந்த பல்லக்கு நிலா முற்றத்தில் கூடியிருந்த ஜனக் கூட்டத்தைப் பிளந்து வழி ஏற்படுத்திக் கொண்டு வந்தது. இரு பக்கமும் விலகி நின்ற மக்கள் முதன் மந்திரியிடம் தங்களுடைய மரியாதையைத் தெரிவித்துக் கொண்டார்கள். பலர் இளவரசரைப் பற்றிய தங்கள் கவலையையும் வெளியிட்டார்கள். முதன் மந்திரியும் கவலை தங்கிய முகத்துடனேதான் தோன்றினார். ஆனாலும் இரு கைகளையும் தூக்கி ஜனங்களுக்கு ஆறுதலும் ஆசியும் கூறும் பாவனையில் சமிக்ஞை செய்து கொண்டு சென்றார். அரண்மனைக் கட்டடத்தின் முகப்பை அடைந்ததும் பல்லக்கு கீழே இறக்கப்பட்டது. முதன் மந்திரி வெளி வந்து முதலில் மேலே நோக்கினார். பெரிய ராணியும் இளவரசியும் அங்கே நிற்பதைப் பார்த்து வணக்கம் செலுத்தினார். பிறகு, துவந்த யுத்தம் நடந்த இடத்தை நோக்கினார். இவ்வளவு நேரமும் தங்களைச் சுற்றி நடப்பது ஒன்றையும் தெரிந்து கொள்ளாமல் வந்தியத்தேவனும் பினாகபாணியும் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். ஆழ்வார்க்கடியான் இதற்குள் இறங்கி வந்து முதன் மந்திரியின் காதருகில் ஏதோ சொன்னான். அவர் தம் முன் வந்த சேவகர்களைப் பார்த்து, ''அரண்மனை முற்றத்தில் கலகம் செய்யும் இந்த முரடர்களை உடனே சிறைப்படுத்துங்கள்!'' என்று கட்டளையிட்டார். சேவகர்களுடன் ஆழ்வார்க்கடியானும் கூட்டத்தைப் பிளந்து கொண்டு சென்றான். சண்டை போட்ட இருவரையும் சேவகர்கள் கைப்பற்றி அவர்களுடைய கைகளை வாரினால் பிணைத்தார்கள். ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவனை நோக்கி ஜாடை செய்யவே அவன் தன்னைச் சிறைப்படுத்தும் போது சும்மாயிருந்தான்.

அநிருத்தர் மேல் மாடத்துக்குச் சென்றார். அங்கு நின்றபடி ஜனங்களைப் பார்த்து, ''உங்களுடைய கவலையையும் கோபத்தையும் நான் அறிவேன். சக்கரவர்த்தியும் ராணிமார்களும் உங்களைப் போலவே துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். அவர்களுடைய கவலையை அதிகப்படுத்தும்படியான காரியம் எதுவும் நீங்கள் செய்ய வேண்டாம். இளவரசரைத் தேடுவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்திருக்கிறது. நீங்கள் எல்லாரும் அமைதியாக வீடு திரும்புங்கள்!'' என்று கூறினார்.

''சக்கரவர்த்தியை நாங்கள் பார்க்க வேண்டும். சக்கரவர்த்தி பழையாறைக்குத் திரும்பி வரவேண்டும்'' என்று கூட்டத்தில் ஒருவர் கூவினார்.

''இலங்கையில் உள்ள எங்கள் ஊர் வீரர்கள் கதி என்ன?'' என்று இன்னொருவர் கேட்டார்.

''சக்கரவர்த்தி தஞ்சை அரண்மனையில் பத்திரமாயிருக்கிறார். அவர் தங்கியுள்ள அரண்மனையை இப்போது வேளக்காரப் படையினர் இரவு பகல் காவல் புரிகின்றனர். கூடிய சீக்கிரத்தில் சக்கரவர்த்தியை இந்த நகருக்கு நானே அழைத்து வருகிறேன். இலங்கையில் உள்ள நம் வீரர்களைப் பற்றியும் உங்களுக்குக் கவலை வேண்டாம். ஈழத்துப் போர் நமக்குப் பூரண வெற்றியுடன் முடிந்து விட்டது. நம் வீரர்கள் விரைவில் திரும்பிவந்து சேருவார்கள்!'' என்று முதன் மந்திரி அறிவித்ததும்

கூட்டத்தில் பெரும் உற்சாக ஆரவாரம் ஏற்பட்டது. சுந்தர சோழரையும் அன்பில் அநிருத்தரையும் வாழ்த்திக் கொண்டு ஜனங்கள் திரும்பலானார்கள்.

முதன் மந்திரி பெரிய மகாராணியைப் பார்த்து, "தேவி! தங்களிடம் மிக முக்கியமான விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டும்! அரண்மனைக்குள் போகலாமா?" என்றார். இளவரசியைத் திரும்பிப் பார்த்து, "அம்மா! உன்னிடம் பிற்பாடு வருகிறேன்" என்று கூறியதும், குந்தவை தன்னுடைய இருப்பிடத்துக்குப் புறப்பட்டாள். அவளுடைய மனத்தில் இப்போது பல கவலைகள் குடிகொண்டன. சோழ சாம்ராஜ்யத்தில் யாராவது ஒருவரிடம் குந்தவை பயம் கொண்டிருந்தாள் என்றால், அவர் முதன்மந்திரி அநிருத்தர்தான். கழுகுப் பார்வையுள்ள மனிதர் அவர். புறக்கண்களினால் பார்ப்பதைத் தவிர, எதிரே உள்ளவர்களின் நெஞ்சிலும் ஊடுருவிப் பார்த்து அவர்களுடைய அந்தரங்க எண்ணங்களை அறியும் ஆற்றல் படைத்தவர். அவருக்கு எவ்வளவு தெரியும், எவ்வளவு தெரியாது, அவரிடம் எதைச் சொல்லலாம், எதைச் சொல்லாமல் விடலாம் என்பதைப் பற்றி இளைய பிராட்டிக்கு ஒரே குழப்பமாயிருந்தது. வாணர் குல வீரனையும் பினாகபாணியையும் சேர்த்து அவர் சிறைப்படுத்தும்படி கட்டளையிட்டது இளவரசிக்கு ஆத்திரத்தை உண்டுபண்ணியது. அதை வெளிக் காட்டிக் கொள்ளவும் முடியவில்லை. அந்த மாபெரும் ஜனக் கூட்டத்தின் முன்னால் வந்தியத்தேவனுக்குப் பரிந்து பேசவும் முடியவில்லை. "என்னிடம் பிற்பாடு வரப் போகிறாராமே? வரட்டும்; ஒரு கை பார்த்து விடுகிறேன்!" என்று மனத்தில் கறுவிக் கொண்டே தன் அந்தப்புரத்தை நோக்கி விரைந்து சென்றாள்.



* * *

செம்பியன்மாதேவி சோழ சாம்ராஜ்யத்தில் அனைவருடைய பயபக்தி மரியாதைக்கும் உரியவரா யிருந்தவர். முதன்மந்திரி அநிருத்தப் பிரம்மராயரும் அதற்கு விலக்கானவர் அல்ல. ஆனாலும் அம்மூதாட்டி இச்சமயம் ஏதோ ஒருவித பயத்துடனேயே நடந்து கொண்டார். அநிருத்தர் ஆசனத்தில் அமர்ந்த பிறகே தாம் அமர்ந்தார்.

"ஐயா! சில காலமாக என் தலையில் இடிமேல் இடியாக விழுந்து கொண்டிருக்கிறது. நீரும் அத்தகைய செய்தி ஏதேனும் கொண்டு வந்தீரா? அல்லது ஆறுதலான வார்த்தை சொல்லப்போகிறீரா?" என்று வினவினார்.

"அம்மணி! மன்னியுங்கள்! தங்கள் கேள்விக்கு என்னால் விடை சொல்ல முடியவில்லை. நான் கொண்டு வந்திருக்கும் செய்தியைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளும் விதத்தைப் பொறுத்திருக்கிறது!" என்றார் தந்திரத்தில் தேர்ந்த முதன் மந்திரி.

"பொன்னியின் செல்வனைப் பற்றிய செய்தி உண்மைதானா, ஐயா! என்னால் நம்பவே முடியவில்லையே? அருள்மொழி வர்மனைப் பற்றி நாம் என்னவெல்லாம் நம்பிக் கொண்டிருந்தோம்? இந்த உலகத்தையே ஒரு குடை நிழலில் ஆளப் பிறந்தவன் என்று நாம் எத்தனை பேசியிருக்கிறோம்?...."

"பெருமாட்டி! ஜோசியர்கள் அவ்விதம் சொல்வதாகத் தாங்கள் என்னிடம் கூறியது உண்மைதான். அடியேன் தங்களை மறுத்தும் பேசியதில்லை; ஒத்துக் கொண்டும் பேசியதில்லை!"

"அது போகட்டும்; இப்போது சொல்லுங்கள். பொன்னியின் செல்வனைச் சமுத்திர ராஜன் கொள்ளை கொண்டு விட்டது நிச்சயந்தானா?"

"நிச்சயம் என்று யார் சொல்ல முடியும், தாயே! அம்மாதிரி செய்தி நாடு நகரமெங்கும் பரவியிருப்பது நிச்சயம்."

"அது உண்மை என்று ஏற்பட்டால், இந்தச் சோழ நாட்டின் கதி என்ன? எத்தகைய விபரீதங்கள் ஏற்படும்?"

"விபரீதங்கள் அது உண்மை என்று ஏற்படும் வரையில் காத்திருக்கப் போவதில்லையென்று தோன்றுகிறது...."

"ஆம், ஆம்! விபரீதம் நேரிடுவதற்கு வதந்தியே போதுமானதுதான். இந்தப் பழையாறை நகர மக்கள் இவ்வளவு ஆத்திரங் கொண்டு திரளாக அரண்மனைக்குள் பிரவேசித்ததை இதுவரையில் நான் பார்த்ததில்லை...."

"பழையாறையில் மட்டும்தான் இப்படி நடந்ததென்று கருத வேண்டாம்.

தஞ்சாவூர் நகரம் நேற்று முதல் அல்லோல கல்லோலமாயிருக்கிறது. வேளக்காரப் படையினர் சக்கரவர்த்தியின் அரண்மனையை விட்டு நகர மறுத்து விட்டார்கள்.. மக்கள் கோட்டைக்குள் திரள் திரளாகப் புகுந்து பழுவேட்டரையர்களின் மாளிகைகளைச் சூழ்ந்து கொண்டார்கள். மதங் கொண்ட யானைகளை ஜனங்கள் பேரில் ஏவி விட்டு அவர்களைக் கலைந்து போகும்படி செய்ய வேண்டியதாயிற்று....''

'' ஐயோ ! இது என்ன விபரீதங்கள்! எத்தகைய பயங்கரமான செய்தி!''

''மதுராந்தகர் பழையாறைக்கு வந்து விட்டதே நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிடில் அந்தப் பயங்கரமான பழி அவரையும் சேர்ந்திருக்கும்....''

''ஐயா! மதுராந்தகன் எப்படி மாறிப் போயிருக்கிறான் என்று தெரிந்தால் தாங்கள் ஆச்சரியப்பட்டுப் போவீர்கள்.''

''ஆச்சரியப்பட மாட்டேன், தாயே! அவை எல்லாம் எனக்குச் சில காலமாகத் தெரிந்த விஷயந்தான்.''

'' தெரிந்திருந்தும் அவனுடைய மனத்தை மாற்றத் தாங்கள் ஒரு முயற்சியும் செய்யவில்லை! இப்போதாவது யோசனை சொல்லி உதவுங்கள்!''

''அம்மணி! மதுராந்தகருடைய மனத்தை மாற்ற வேண்டிய அவசியம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. அவருடைய கட்சியை ஆதரித்துப் பேசவே நான் வந்திருக்கிறேன்....''

''அப்படியென்றால்? எனக்கு விளங்கவில்லை ஐயா!''

''அம்மணி! மதுராந்தகர் இந்தச் சோழ சிங்காதனம் தமக்கு உரியது என்று கருதுகிறார். சக்கரவர்த்திக்குப் பிறகு தாம் இந்த ராஜ்யத்தை ஆளவேண்டுமென்று ஆசைப்படுகிறார். அது நியாயமான ஆசை. நன்றாக அவர் மனத்தில் வேரூன்றிவிட்ட ஆசை. அதைத் தடுக்க முயல்வதால் சோழ ராஜ்யத்துக்கு நன்மை ஏற்படாது. அதை நிறைவேற்றி வைப்பதுதான் உசிதம்....''

''ஐயோ! இது என்ன வார்த்தை! நீர்கூடவா சோழ சக்கரவர்த்திக்குத் துரோகம் செய்யத் துணிந்து விட்டீர்? இது என்ன விபரீத காலம்?''

''பெருமாட்டி! சக்கரவர்த்திக்குத் துரோகம் செய்ய நான் கனவிலும் கருதியதில்லை. சக்கரவர்த்தியின் கட்டளை



யின் பேரிலேயே வந்தேன். அவர் தங்களிடம் விண்ணப்பித்துக் கொள்ளச் சொன்னதைத்தான் சொல்கிறேன். சக்கரவர்த்தியின் காலத்துக்குப் பிறகு மதுராந்தகர் சிங்காதனம் ஏற விரும்புகிறார். பழுவேட்டரையர்கள் அதற்காகச் சதி செய்கிறார்கள். ஆனால் சக்கரவர்த்தி இப்போதே மதுராந்தகருக்கு முடிசூட்டிவிட்டுச் சிங்காதனத்திலிருந்து விலகிக் கொள்ள விரும்புகிறார். இதற்குத் தங்கள் சம்மதத்தைப் பெற்று வரும்படி என்னை அனுப்பியிருக்கிறார்....''

''சக்கரவர்த்தி அவ்விதம் செய்ய விரும்பலாம். ஆனால் அதற்கு என்னுடைய சம்மதம் ஒருநாளும் கிட்டாது. என் பதியின் விருப்பத்துக்கு விரோதமான இந்தக் காரியத்தை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். கல்விக் கடலின் கரை கண்ட முதல் அமைச்சரே! சக்கரவர்த்தியே சொன்னாலும் நீர் இந்த முறை தவறான காரியத்தை என்னிடம் சொல்ல எப்படி வந்தீர்? சோழ சிங்காதன உரிமையைப் பற்றி உமக்கும் எனக்கும் மட்டும் தெரிந்த சில உண்மைகள் இருக்கின்றன வென்பதை நீர் அடியோடு மறந்து விட்டீரோ?''

''அம்மணி! நான் எதையும் மறக்கவில்லை. தங்களுக்குத் தெரியாத சில உண்மைகளும் எனக்குத் தெரியும். ஆகையினாலேயே சக்கரவர்த்தியின் தூதனாகத் தங்களிடம் வந்தேன்...''

''ஐயா! தங்களுடைய மதி நுட்பமும் இராஜ தந்திரமும் உலகம் அறிந்தவை. அவற்றைப் பெண்பாலாகிய என்னிடம் காட்ட வேண்டாம்...''

''பெருமாட்டி! தங்களிடம் நான் வாதமிட வரவில்லை. என் சாமர்த்தியத்தைக் காட்டுவதற்கும் வரவில்லை. இந்தச் சோழ நாட்டைப் பேரபாயத்திலிருந்து காப்பாற்றி அருளும்படி மன்றாடிப் பிரார்த்தனை செய்ய வந்தேன்.''

''தங்கள் பிரார்த்தனையைப் பிறைசூடும் பெருமானிடம் செலுத்திக்கொள்ளுங்கள். அல்லது தங்கள் இஷ்ட தெய்வமான விஷ்ணு மூர்த்தியிடம் பிரார்த்தனை செய்யுங்கள்!...''

''ஆம், தாயே! தாங்கள் பெரிய மனசு செய்யாமற் போனால் அம்பலத்தானும், அரங்கநாதனும்தான் இந்த நாட்டைக் காப்பாற்ற வேண்டும்.''

''அப்படி என்ன ஆபத்து இந்த நாட்டுக்கு வந்து விட்டது? மதுராந்தகன் சிங்காதனம் ஏறுவதால் அதை எப்படித் தடுக்க முடியும்?''

''கேளுங்கள் பெருமாட்டி! இன்றைக்கு இந்நகரமாந்தர் கொதித்தெழுந்தது போல் காஞ்சிபுரத்திலிருந்து இராமேசுவரம் வரை உள்ள மக்கள் இன்னும் இரண்டு மூன்று நாளைக்குள் ஆத்திரமடைந்து கொதித்தெழுவார்கள். அத்துடன் முடிந்து விடாது. இலங்கையிலிருந்து பூதி விக்கிரமகேசரி ஏற்கெனவே படை திரட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டார் என்று அறிகிறேன். ஆதித்த கரிகாலனுக்குச் செய்தி எட்டும்போது அவனும் பொறுக்க மாட்டான். வட திசைச் சைன்யத்துடன் தஞ்சையை நோக்கிக் கிளம்புவான். பழுவேட்டரையர்களும் மற்றச் சிற்றரசர்களும் ஏற்கெனவே படை திரட்டிக் கொண்டிருக்கிறார்கள். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நடந்த யுத்தத்தைப் போன்ற பயங்கரமான தாயாதிச் சண்டை இந்த நாட்டில் நடைபெறும். தங்களுடைய உற்றார் உறவினர் எல்லாரும் அழிந்து படுவார்கள். இதையெல்லாம் தாங்கள் பார்த்துக் கொண்டிருக்கப் போகிறீர்களா?...''

''ஐயா! மதிநுட்பம் மிகுந்த முதன் மந்திரியாரே! எனக்கு உற்றார் உறவினர் என்று யாரும் இல்லை. மேற்கே மலை நாட்டில் அவதரித்த சங்கரர் என்ற மகாபுருஷரைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டிருப்பீர். அந்த மகான்,

'மாதா ச பார்வதி தேவி
பிதா தேவோ மகேச்வர:
பாந்தவா: சிவபக்தாஸ்ச'

என்று அருளியிருக்கிறார். என்னுடைய அன்னை பார்வதி தேவி; என் தந்தை பரமசிவன்; என் உற்றார் உறவினர் சிவபக்தர்கள். இந்த உலகில் வேறு பந்துக்கள் எனக்கு இல்லை...''

'' அம்மணி ! அதே ஸ்லோகத்தில் சங்கரர் அருளியுள்ள நாலாவது வாக்கியத்தைத் தங்களுக்கு நினைவூட்டுகிறேன்.

'ஸ்வதேசோ புவனத்ரய:'

என்றும் அவர்தான் சொல்லியிருக்கிறார். நாம் பிறந்த தேசம்தான் நமக்கு மூன்று உலகமும். தங்களுடைய சொந்த நாடு உள் நாட்டுச் சண்டையினால் அழிந்து போவதைத் தாங்கள் பார்த்துக்கொண்டிருப்பீர்களா?''

''என்னுடைய சொந்த தேசம் எனக்கு மூன்று உலகத்தையும் விட அருமையானதுதான். ஆனால் இந்தச் சாண் அகலத்துச் சோழ நாடுதான் நம்முடைய சொந்த நாடா? ஒரு நாளுமில்லை. வடக்கே கைலயங்கிரி வரையில் உள்ள நாடு என்னுடைய நாடு. சோழ நாட்டில் இடமில்லாவிட்டால் நான் காசி க்ஷேத்திரத்துக்குப் போவேன்.

காஷ்மீரத்துக்கும் கைலாசத்துக்கும் போவேன். அப்படி யாத்திரை கிளம்பும் யோசனை எனக்கு வெகு நாளாக உண்டு. அதற்கு உதவி செய்யுங்கள்...''

''தாயே! தெற்கே திரிகோண மலையிலிருந்து வடக்கே இமோத்கிரி வரையில் உள்ள தேசம் நமது ஸ்வதேசம் என்று ஒத்துக் கொள்கிறேன். இப்படிப் பரந்துள்ள பாரத புண்ணிய பூமிக்குத் தற்போது பேரபாயம் நேர்ந்திருக்கிறது. பட்டாணியர்கள், துருஷ்கர்கள், மொகலாயர்கள், அராபியர்கள் என்னும் சாதியினர் பொங்கிக் கிளம்பி எந்தப் புது நாட்டைக் கைப்பற்றலாம் என்று புறப்பட்டிருக்கிறார்கள். ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு யவனர்களும் ஹூணர்களும் படையெடுத்து வந்தது போல் இந்தப் புதிய மதத்தினர் இப்போது அணி அணியாக இந்நாட்டின் மீது படையெடுக்கப் புறப்பட்டிருக்கிறார்கள். அவர்களுடைய மதம் விசித்திரமான மதம். கோயில்களை இடிப்பதும் விக்கிரகங்களை உடைப்பதும் புண்ணியம் என்று நம்புகிறவர்கள். அம்மணி! இவர்களைத் தடுத்து நிறுத்தக் கூடிய பேரரசர்கள் யாரும் இப்போது வட நாட்டில் இல்லை. சோழ நாட்டு வீரர்கள் கங்கை நதிவரையில், அப்பால் இமயமலை வரையில் சென்று பெரிய பாரத சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்கப் போகிறார்கள் என்றும், கோயில்களை இடிக்கும் கூட்டங்களைத் தடுத்து நிறுத்தப் போகிறார்கள் என்றும் அடியேன் கனவு கண்டு வந்தேன். அந்தக் கனவை நனவாக்கத் தாங்கள் உதவி செய்யுங்கள். மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டச் சம்மதித்துச் சோழ நாட்டில் தாயாதிச் சண்டை ஏற்படாமல் இருக்க உதவி புரியுங்கள்!''

இதைக் கேட்ட செம்பியன் மாதேவி சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பின்னர்,

''ஐயா! ஏதேதோ இந்தப் பேதைப் பெண்ணுக்கு விளங்காத விஷயங்களைச் சொல்லி என்னைக் கலங்க அடித்து விட்டீர்கள். இந்தப் புண்ணிய பாரத பூமிக்கு அப்படிப்பட்ட ஆபத்து நேரிடுவதாயிருந்தால், அதைச் சர்வேசுவரன் பார்த்துத் தடுக்க வேண்டுமே தவிர, இந்த அபலையினால் என்ன செய்ய முடியும்? என்னுடைய கணவர் இறைவனடியைச் சேரும் சமயத்தில் எனக்குச் சொல்லிவிட்டுப் போனதை ஒருநாளும் நான் மறக்க மாட்டேன். அதற்கு விரோதமான காரியம் எதுவும் நான் செய்ய மாட்டேன்'' என்றார்.

''அப்படியானால் இதுவரையில் தாங்கள் அறியாத ஓர் உண்மையை இப்போது நான் தெரியப்படுத்தியாக வேண்டும்!'' என்றார் அநிருத்தர்.

இச்சமயத்தில் மதுராந்தகன் அங்கே தடபுடலாகப் பிரவேசித்து, ''அம்மா! இது என்ன நான் கேள்விப்படுவது? அருள்மொழி வர்மனைக் கடல் கொண்டு விட்டதா?'' என்று கேட்டான்.

''பெருமாட்டி! தங்கள் செல்வக் குமாரருக்கு ஆறுதல் சொல்லுங்கள். நான் சொல்ல விரும்பியதை இன்னொரு சமயம் சொல்லிக் கொள்ளுகிறேன்'' என்று முதன் மந்திரி கூறிவிட்டுக் கிளம்பினார்.

அவர் வாசற்படி தாண்டியதும் மதுராந்தகன், ''இதோ போகிறாரே, இவர் தான் என்னுடைய முதன்மையான சத்துரு. நான் இங்கிருக்கும் போதே தங்களுக்குத் துர்ப்போதனை செய்ய வந்துவிட்டார் அல்லவா?'' என்று இளவரசன் மதுராந்தகன் கூறியது அநிருத்தரின் காதிலும் விழுந்தது.

## இருபத்தேழாம் அத்தியாயம்

# குந்தவையின் திகைப்பு

முதன் மந்திரி அநிருத்தர் குந்தவை தேவியின் அரண்மனையை அடைந்தார். இளவரசி அவரைப் பார்த்ததும் எழுந்து நின்று நமஸ்கரித்தாள்.

''வீரத்திலும் குணத்திலும் சிறந்த கணவனை அடைந்து நீடூழி வாழ்வாயாக!'' என்று முதன் மந்திரி அநிருத்தர் ஆசீர்வதித்தார்.

''ஐயா! இந்தச் சமயத்தில் இத்தகைய ஆசீர்வாதத்தைத்தானா செய்வது?'' என்றாள் இளவரசி.

''ஏதோ இந்தக் கிழவனுக்குத் தெரிந்த ஆசியைக் கூறினேன். வேறு எந்த ஆசியைக் கோருகிறாய் அம்மா?''

''என் அருமைத் தந்தையின் உடல் நிலையைப் பற்றி எல்லோரும் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறோம். அருள்மொழி வர்மனைப் பற்றி நாடெல்லாம் கவலையில் ஆழ்ந்திருக்கிறது..''

''ஆனால் உன்னுடைய திருமுகத்தில் அதைப் பற்றிய கவலை எதையும் நான் காணவில்லையே, தாயே!''

''வீர மறக் குலத்தில் பிறந்தவள் நான். எல்லோரையும் போல அபாயம் என்றதும் அழுது கொண்டிருக்கச் சொல்கிறீர்களா?...''

''ஒருநாளும் அவ்விதம் சொல்லமாட்டேன். என்னைப் போன்ற வீரமற்ற ஜனங்களுக்கு இளவரசி ஆறுதல் கூறும்படிதான் சொல்கிறேன்.''

''ஆச்சாரியரே! தங்களுக்கா நான் ஆறுதல் கூறவேண்டும்? உலகமே புரண்டாலும் நிலை கலங்காத வயிர நெஞ்சம் படைத்தவராயிற்றே தாங்கள்?''

''அப்படிப்பட்ட என்னையும் கலக்கி விடுகிறாய், அம்மா! அந்தப்புரத்துப் பெண்கள் ஆடல் பாடல்களில் ஆனந்தமாகக் காலம் கழித்து வரவேண்டும். அதைவிட்டு இராஜாங்க விஷயங்களில் நீ தலையிட்டதனால் எத்தகைய விபரீதம் நேர்ந்தது பார்த்தாயா!''

''ஐயோ! இது என்ன பழி? நான் எந்த இராஜாங்க விஷயத்தில் தலையிட்டேன்? என்றால் என்ன விபரீதம் நடந்து விட்டது?''

''இன்னும் சில காலத்துக்குப் பொன்னியின் செல்வன் இலங்கையிலேயே இருக்க வேண்டும் என்று நான் சொல்லி விட்டு வந்தேன். அதற்கு விரோதமாக நீ உடனே புறப்பட்டு வரும்படி உன் தம்பிக்கு ஓலை அனுப்பினாய். உன் விருப்பத்துக்கு மாறாக இந்தக் கிழவன் பேச்சை யார் மதிப்பார்கள்? அதனால் நேர்ந்துவிட்ட விபத்தைப் பார்த்தாயா? சோழ நாட்டு மக்களின் கண்ணுக்குக் கண்ணான இளவரசனைக் கடல் கொண்டு விட்டது. சற்று முன் இந்த அரண்மனை வாசலில் ஜனத் திரள் கூடி ஆர்ப்பாட்டம் செய்ததைப் பார்த்தாய். இம் மாதிரி நாடெங்கும் இன்று குழப்பம் நடந்து வருகிறது. இந்த அல்லோலகல்லோலத்துக்குக் காரணம் நீ அல்லவா தாயே!''

''என்னுடைய ஓலையைப் பார்த்துவிட்டு அருள்மொழி வர்மன் இலங்கையிலிருந்து புறப்பட்டான் என்று ஏன் சொல்கிறீர்கள்? பழுவேட்டரையர்கள் இரண்டு கப்பல்கள் நிறைய வீரர்களை அனுப்பி இளவரசனைச் சிறைப்படுத்திக் கொண்டு வரச் செய்தது உமக்குத் தெரியாதா?''

''தெரியும் அம்மா! தெரியும்! அத்துடனிருந்தால் இப்போது பொன்னியின் செல்வனுக்கு நேர்ந்துவிட்ட கதிக்குப் பழுவேட்டரையர்களைப் பொறுப்பாளிகளாக்கலாம். அவர்கள் அனுப்பிய கப்பல்கள் இரண்டும் நாசமாகி விட்டன. உன்னுடைய ஓலைக்காகத்தான் இளவரசன் புறப்பட்டான் என்று அவர்கள் சொன்னால் யார் அதை மறுக்க முடியும்?''

''ஐயா, நான் ஓலை அனுப்பியது தங்களுக்கு எப்படித் தெரியும்? பழுவேட்டரையர்களுக்கு எப்படித் தெரியும்?''

''நல்ல கேள்வி கேட்டாய் அம்மா! எங்களுக்கு மட்டும்தானா தெரியும்? உலகத்துக்கெல்லாம் தெரியும். நீ அனுப்பிய தூதன் இலங்கையில் முதலில் நம் வீரர்களால் சிறைப்படுத்தப்பட்டான். அதனால் இலங்கையில் உள்ளவர்களுக்கெல்லாம் தெரியும். அவனோடு கோடிக்கரை வரையில் சென்ற வைத்தியர் மகன் மூலமாக இந்த நாட்டில் உள்ளவர்களுக்கெல்லாம் தெரியும். நீ அந்தரங்கமாகச் செய்த காரியம் இவ்வளவு தூரம் அம்பலமாகி யிருக்கிறது! ஆகையினால்தான் ஸ்திரீகள் இராஜாங்கக் காரியங்களில் தலையிடக் கூடாது என்று நம் பெரியோர்கள் சொல்லி யிருக்கிறார்கள்.''

குந்தவை சிறிது நேரம் திகைத்துப் போய் நின்றாள். மறுமொழி என்ன சொல்வது என்று அவளுக்குத் தெரியவில்லை. முதன் மந்திரி நன்றாகத் தன்னை மடக்கிவிட்டார். அவர் சொல்வதில் உண்மை இருக்கத்தான் இருக்கிறது. இந்த எண்ணம் தோன்றியதும் வாணர் குல வீரன் மீது அவளுக்குக் கோபம் எழுந்தது. வீர சாகசச் செயல்கள் அவன் செய்யக் கூடியவன்தான். ஆனால் காரியத்தைப் பகிரங்கப் படுத்திக் கெடுத்துவிட்டானே! அவனைப் பார்த்து நன்றாகக் கண்டிக்க வேண்டும். இவ்வாறு எண்ணியதும் முதன் மந்திரியின் கட்டளையின்படி அவன் சிறைப்படுத்தப்பட்டது நினைவு வந்தது. என்னவெல்லாம் தொந்தரவுக்கு ஆளாக்கிக் கொண்டு, எனக்கும் தொந்தரவு அளிக்கிறான்? சற்று நேரம் சும்மா இருந்திருக்கக் கூடாதா? வைத்தியர் மகன் ஏதாவது உளறினால் அதற்காக அவன் பேரில் மேல் மாடத்திலிருந்து பாய்ந்து, சண்டை தொடங்கியிருக்க வேண்டுமா?

''ஐயா! ஒரு கோரிக்கை செய்து கொள்கிறேன். பெரிய மனசு செய்து நிறைவேற்றித் தரவேண்டும்.''

''தேவி! கட்டளை இடு! இந்த இராஜ்யத்தில் உன்னுடைய வார்த்தைக்கு மறு வார்த்தை ஏது?''

''தாங்கள் அரண்மனை வாசலுக்கு வரும் சமயத்தில் இரண்டுபேர் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களைச் சிறைப்படுத்தத் தாங்கள் கட்டளை இட்டீர்கள்.''

''அவர்கள் செய்தது பெருங் குற்றம். அரண்மனையில் மகாராணியின் கண் முன்னால் அவர்கள் சண்டை தொடங்கி

யது பெரும் பிசகு! அதுவும் எப்பேர்ப்பட்ட சமயத்தில்? பெரும் ஜனக் கூட்டம் கொதிப்புடன் இருந்த நேரத்தில். காரணம் தெரியாத ஜனங்கள் தாங்களும் சண்டையில் கலந்து கொண்டிருந்தால் எத்தகைய விபத்து நேர்ந்திருக்கும்? சிறு நெருப்புப் பொறி பெருங் காட்டையே அழிப்பது போல் நாடு நகர மெல்லாம் கலகமும் குழப்பமும் விளைந்திருக்குமே?''

''ஆம், ஐயா! அவர்கள் செய்தது பெரும் குற்றம்தான். ஆயினும் அவர்களில் ஒருவனை மன்னித்து விடுதலை செய்யும்படி தங்களை மன்றாடி வேண்டிக்கொள்கிறேன்.''

''இளவரசியின் அருளுக்குப் பாத்திரமான அந்தப் பாக்கியசாலி யார்?''

''நான் இலங்கைத் தீவுக்கு அனுப்பிய தூதன் அவன்தான்.''

''பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று.''

''எதனால் அவ்வாறு சொல்லுகிறீர்கள்?''

''அந்தத் தூதனை நானே சிறைப்படுத்த வேண்டும் என்றிருந்தேன். இங்கே அவனாகவே எளிதில் அகப்பட்டுக் கொண்டான்.''

''எதற்காக? என்ன குற்றத்துக்காக?''

''தாயே! அவன் பேரில் பயங்கரமான குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.''

''அது என்ன?''

''பொன்னியின் செல்வனை அவன்தான் கடலில் தள்ளி மூழ்க அடித்து விட்டான் என்று.''

''என்ன நாராசமான வார்த்தைகள்! யார் அப்படிக் குற்றம் சாட்டுவது?''

''பலரும் அவ்வாறு குற்றம் சாட்டுகிறார்கள். இளவரசரைக் கப்பலில் ஏற்றிக் கொண்டு வந்த பார்த்திபேந்திரன் சொல்கிறான். பழுவேட்டரையர்கள் 'இருக்கலாம்' என்கிறார்கள். நானும் சந்தேகிக்கிறேன்.''

''ஆச்சாரியரே! ஜாக்கிரதை! நான் ஒரு கொலைகாரனைப் பிடித்து அனுப்பி என் தம்பியைக் கொன்றுவிட்டு வரச் சொன்னதாகவா சந்தேகிக்கிறீர்கள்?''

''ஒரு நாளும் இல்லை தாயே! அவனை உனது நம்பிக்கைக்குரிய தூதன் என்று நினைத்துக் கொண்டுதான் நீ அனுப்பினாய். அது தவறாக இருக்கலாம் அல்லவா? அவன் மாற்றார்களின் ஒற்றனாயிருக்கலாம் அல்லவா?''

''இல்லவே இல்லை. ஆதித்த கரிகாலன் அவனை என்னுடைய உதவிக்கு அனுப்பினான். அவனைப் பூரணமாக நம்பலாம் என்று எழுதி அனுப்பினான்...''

''ஆதித்த கரிகாலனும் ஏமாந்திருக்கலாம் அல்லவா இளவரசி? வழியில் அவன் மனம் மாற்றப்பட்டும் இருக்கலாம் அல்லவா? நான் இங்கே வரும்போது 'ஒற்றன்' என்ற குற்றச்சாட்டு என் காதில் விழுந்தது. மேலே இருந்தவனைப் பார்த்துக் கீழே நின்றவன் குற்றம் சாட்டுகிறான். அது என்ன, அம்மா?''

''மேலே நின்றவன்தான் என் தமையன் அனுப்பிய தூதன். வாணர்குலத்தில் வந்த வல்லவரையன் வந்தியத்தேவன். கீழே நின்றவன் வைத்தியர் மகன் பினாகபாணி. வந்தியத் தேவனைப் பழுவேட்டரையர்களின் ஒற்றன் என்று வைத்தியர் மகன் குற்றம் சாட்டினான். என்ன அறிவீனம்?''

''ஏன் இருக்கக் கூடாது, தாயே?''

''ஒரு நாளும் இருக்க முடியாது. பழுவேட்டரையர் காவலிலிருந்து அவன் தப்பி வந்தவன். அவனைத் திரும்பக் கைப்பற்றப் பழுவேட்டரையர்கள் எத்தனையோ ஆட்களை அனுப்பிப் பிரம்மப் பிரயத்தனம் செய்தார்கள்.''

''அவனிடம் பழுவூர் முத்திரை மோதிரம் எவ்விதம் வந்தது தாயே?''

'' அந்த வஞ்சக அரக்கி, — மாய மோகினி, — விஷநாகம், — தயவுசெய்து மன்னித்துக் கொள்ளுங்கள், — பழுவூர் இளைய ராணி கொடுத்துத்தான் அவனுக்கு அம்மோதிரம் கிடைத்தது.''

'' அது உனக்குத் தெரிந்திருப்பது பற்றிச் சந்தோஷப்படுகிறேன். நான் சொன்னால் நீ நம்பியிருக்க மாட்டாய். அந்த வல்லத்து வீரன் பழுவேட்டரையர்களின் ஒற்றன் அல்ல என்பது சரி. ஆனால் பழுவூர் ராணியின் ஒற்றனாயிருக்கலாம் அல்லவா ?''

''அது எப்படி முடியும் ?''

''எப்படி முடியும் என்று சொல்லுகிறேன். வந்தியத்தேவன், — நீ இலங்கைக்கு அனுப்பிய அந்தரங்கத் தூதன் — தஞ்சைக் கோட்டைக்கு வெளியில் பழுவூர் ராணியைப் பல்லக்கில் சந்தித்தான். அப்போது முத்திரை மோதிரத்தைப் பெற்றுக் கொண்டான். பிறகு, கோட்டைக்குள் பழுவூர் அரண்மனையின் அந்தப்புரத்தில் அவளைச் சந்தித்தான். அவனைப் பழுவூர் இளைய ராணி பொக்கிஷ நிலவறையில் ஒளித்து வைத்திருந்து வெளியே அனுப்பினாள். உன்னிடம் ஓலை கொண்டு வரப் போகிறான் என்று அவளுக்குத் தெரியும். இலங்கையிலிருந்து அவன் திரும்பி வரும்போது அரிச்சந்திர நதிக் கரையில் பாழடைந்த பாண்டியன் அரண்மனை

யில் நள்ளிரவில் அவர்கள் இருவரும் சந்தித்துப் பேசினார்கள். அதற்குப் பிறகும் பழுவூர் முத்திரை மோதிரம் வந்தியத்தேவனிடம் இருக்கிறது. இதையெல்லாம் பற்றி நீ என்ன நினைக்கிறாய், அம்மா! உன் தூதனிடம் இன்னமும் பரிபூரண நம்பிக்கை வைத்திருக்கிறாயா?''

குந்தவையின் உள்ளம் இப்போது உண்மையாகவே குழப்பத்தில் ஆழ்ந்தது. (தொடரும்)

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

# வணங்கும் மழைப் பூச்சி!

வணங்கும் மழைப் பூச்சிகள் இந்தியாவின் பல பாகங்களிலும் உள்ள காடுகளில் பல நிறங்களில் பூக்களைப் போன்று பசுமையான இலை, கொடிகளில் ஒட்டிக்கொண்டு காற்றில் அசைந்து கொண்டிருக்கும். சில சமயங்களில் காடுகளின் வழியாகப் போகும் மனிதர்கள் இவற்றை ஒருவிதமான பூக்கள் என்று பறிக்கப்போய் ஏமாற்றமடைவர். இலைகள் போலவும் தங்களுடைய இருப்பிடத்திற்குத் தகுந்தவாறு அமைப்பும், நிறமும் கொண்டிருக்கின்றன.

மதுரைக்கு 13 மைல்களுக்கு அப்பாலுள்ள அழகர் மலையில் பழமுதிர்ச்சோலைக்கும் நூபுர கங்கைக்கும் பயணிகள் செல்லும் பாதையருகில் நாம் சாதாரணமாக இந்த வணங்கும் மழைப் பூச்சிகளைக் காணலாம். அழகர் கோவில் மலையில் ஆறு வகை வணங்கும் மழைப் பூச்சிகள் கிடைக்கின்றன.

பூச்சி இனங்களிலேயே வணங்கும் மழைப் பூச்சிகளைத் தவிர மற்ற எந்த இனத்திலும் இந்த அளவு வஞ்சகப் பண்புகளைக் காண முடியாது. இப்பூச்சியின் முன் பகுதி உடம்பானது நீண்டு மெலிந்து ஒட்டகச் சிவிங்கியின் கழுத்து போன்று இருக்கும். கத்தியல் போன்ற விந்தையான தலையும், முக்கோண வடிவமான முகமும், முன்னால் தள்ளிய அமைப்பைக் கொண்ட கண்களும் கொண்டது. இரண்டு இணைப்பின்னங்கால்கள் எட்டுக்கால் பூச்சி போன்று இருக்கும். முன்னங்கால்கள் மிகவும் நீண்டதாயும் இரண்டாக மடித்தும் வைக்கப்பட்டிருக்கும். இந்தப் பூச்சி உட்கார்ந்திருக்கும்போதோ அங்கு மிங்கும் அலையும்போதோ இந்தக் கால்களை ஆயுதங்களாகக் கருதுகிறது. மணிக்கணக்கில் அதிக அசைவு இல்லாமல் நீண்ட கழுத்தை உயர்த்தி முன்னங் கால்களை முகத்தின் முன் வைத்துக்கொண்டு, "என்னைத் துன்புறுத்தாதீர்கள், யாருக்கும் தீங்கு செய்யாத பிராணி'' என்று சொல்வதுபோல் உட்கார்ந்துகொண்டிருக்கும். வேகமாக ஓடக்கூடிய திறன் பெற்றது. தன்னால் எதிர்க்க முடியாத பிராணிகளைக் கண்டால் உடனே வேகமாக ஓடி எங்காவது மறைந்து கொள்ளும்.

ஒன்றுமே தெரியாதமாதிரி இருந்து கொண்டு தன்னுடைய பகைவர்களை இது அடித்து வீழ்த்தி விடும். அதனுடைய நீண்ட கால்கள் உண்மையிலேயே கொடிய வலைகளாகும். அக்கால்களின் இரண்டாவது மூன்றாவது இணைப்புகள் கூர்மையான கத்தி போன்றவை. இரண்டு கால்களையும் ஒன்று சேர்த்துக் கத்திரிக்கோல் மாதிரி தன் இரைகளைக் கத்தரித்து விடும். ஒன்றுமே அறியா சாது போன்று இருக்கும். சமயத்தில் ஏதாவது இரை தென்பட்டால் இந்த வணங்கும் மழைப்பூச்சி சாமர்த்தியமாகத் தன் இரையைப் பிடித்து விரைவில் தன்னுடைய முன்னங் கால்களால் அவற்றை நசுக்கி, துடித்துக் கொண்டிருக்கும் இரையை வாயில் தள்ளிக் கொள்ளும். ரொட்டி சாப்பிடுவது போல ஒவ்வொரு துண்டாகக் கவ்வித்துச் சாப்பிடும்!

வணங்கும் மழைப்பூச்சி தனது இனத்தையே தின்றுவிடும்! இரண்டு மழைப்பூச்சிகள் சந்தித்தால் உடனே சண்டை தொடங்கிவிடும். முன்னங்கால்களை ஒன்றை நோக்கி ஒன்று வீசித் தலைகளைக் கத்தரிக்க எத்தனிக்கும். ஏதாவது ஒன்று வெற்றி பெற்றால் மற்றது அதனுடைய இரையாகிவிடும். பெண் வணங்கும் மழைப்பூச்சிகள் மிகவும் கொடியதன்மை வாய்ந்தவை. பெண்கள் ஆண்களைவிட உருவத்தில் பெரியவையாக இருக்கும். பெண்களுக்குக் கோபம் வந்தால் ஆண்களையே அடித்துச் சாப்பிட்டுவிடும். வெப்ப நாடுகளில் இருக்கும் சில வணங்கும் மழைப் பூச்சிகள் பெரியவையாக இருக்கின்றன. அவை சிறிய தவளைகளையும், பல்லிகளையும், சிறிய பறவைகளையும் கூடக் கொல்லக்கூடிய தன்மை வாய்ந்தவை!

வணங்கும் மழைப்பூச்சி மரக்கிளைகளிலோ அல்லது இலைகளின்மீதோ முட்டைகளை இட்டு அம்முட்டைகளை ஒன்று சேர்த்து ஒரு கோழி முட்டை வடிவம் போன்று அமைக்கிறது. பின்பு இந்த முட்டைகளின் மீது எளிதில் கட்டியாகக் கூடிய களிபோன்ற திரவத்தைத் தன் வாயிலிருந்து சுரந்து அதை மூடுகிறது. அம்மூடியின்மீது மேடும் பள்ளமுமான அமைப்புகள் காணப்படுகின்றன. வணங்கும் மழைப் பூச்சிகள் செப்டம்பர் மாதத்தில் முட்டையிட்டு ஜனவரி மாதத்தில் குஞ்சு பொரிக்கின்றன. ஆனால் சிறகு நன்கு வளர்ச்சியடையாமல் இருக்கும். வெப்ப நாடுகளில் வணங்கும் மழைப்பூச்சிகள் நன்கு வளர்ச்சியடைவதற்கு ஒரு வருடமும், மற்ற நாடுகளில் தட்ப வெப்ப நிலைகளுக்கேற்ப 6-மாதத்திலிருந்து இரண்டு வருடமும் ஆகின்றது.

முன் காலங்களில் இதன் கொடிய தன்மையை அறியாத மக்கள் இது இறைவனை வணங்கும் பக்தனைப் போன்றது, ஆண்டவன் அருள் பெற்ற பாக்கியசாலி என்று நம்பினார்கள். இவை முன்னங்கால்களை மடக்கும்போது கும்பிடுவதுபோன்று இருக்கும். வணங்கும் மழைப்பூச்சிகள் புனித பிரான்சிஸ் சேவியர் கட்டளையிட்டபோது பக்திப் பாடல்களைப் பாடியதாக ஒரு கதை கூறுகின்றது. கிரேக்க நாட்டவர் பின்னால் நடப்பதை முன்னே சொல்லும் ஒரு வகையான விந்தைப் பிறவியாக இவற்றைக் கருதி வந்தார்கள். வழி தவறிவிட்ட ஒரு குழந்தை, இப்பூச்சியை நோக்கி வீட்டிற்குப் போகக்கூடிய பாதை எங்கே என்று கேட்டால் இந்தப் பூச்சி உடன் தன்னுடைய முன்னங்கால்களில் ஒன்றைத் தூக்கிச் சரியான பாதையைக் காண்பிக்கும் என்று பல தேசத்துக் குடிமானவர்கள் கருதுகிறார்கள். முகம்மதியர்கள் இப்பூச்சியானது மெக்காவை நோக்கியே தொழுகிறது என்று நம்புகிறார்கள். இந்த வணங்கும் மழைப் பூச்சி மழை வரும் திசையைக் குறிப்பாகக் காண்பிக்கும் என்று ஆதிகாலத்து மக்கள் நம்பினார்கள்.

சீனாவிலும், ஜப்பானிலும் வணங்கும் மழைப் பூச்சிகளைக் கூட்டிலடைத்துச் சண்டையிடச் செய்து மக்களுக்கு வேடிக்கை காண்பிப்பர். பார்வையாளர் இந்தச் சண்டையின் வெற்றி தோல்வி குறித்துப் பந்தயம் கட்டுவார்கள். —அந்தோனி பேசில்

வணங்கும் மழைப்பூச்சி யொன்று மற்றொரு பூச்சியின் தலையைத் துண்டித்து விட்டு உடல் பாகத்தை உண்ண ஆரம்பித்தல்.





# கோணங்களின் கோலம்

அடுத்தடுத்து வர்ணத்திலும், வெண்மையிலும்
முக்கோண டிசைன்கள் கொண்டவை.
பார்ப்பவர்கள் பாராட்டும் எழில் தோற்றத்
தைத் தருபவை. அணிந்து கொண்டாலே
ஆனந்தபரவசமடைவீர்கள்.
டாடா டெக்ஸ்டைல்ஸ் வாயில்கள்
எல்லாமே சலவை செய்யவும்,
இஸ்திரி போடவும் சுலபமானவை.
மொறுமொறுவென்ற புதுமையுடன் திகழ்பவை.

**TATA** *Textiles* டாடா டெக்ஸ்டைல்ஸ் அளிக்கும் வாயில்கள்

# ராமாயணம்

## ராஜாஜி



"ராவணனைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக்கிறாயா? விச்ரவஸனுடைய வீரபுத்திரனும் ராக்ஷஸர்களுடைய அரசனுமான அந்த ராவணனுடைய சகோதரியாவேன் நான். என் பெயர் சூர்ப்பணகை. ராவணனுடைய சகோதரர்களான கும்பகர்ணனும், விபீஷணனும் மகா பலவான்கள். தவிர இக்காட்டில் அரசு புரியும் கரனும் தூஷணனும் என் சகோதரர்கள். இவர்களுடைய தேக பலமும் அதிகாரமும் பெரிது. ஆனால் நான் அவர்களுக்கு உட்பட்டவள் அல்ல. என் இஷ்டப்படி நான் எதையும் செய்வேன். இந்த வனத்தில் என்னைக் கண்டு யாரும் பயப்படுவார்கள். உன்னைக் கண்டது முதல் உன் மேல் அடங்காத காதல் கொண்டு விட்டேன். நீ தான் என் கணவன். ஏன் இந்தச் சிறு பூச்சியைப் போன்ற ஒரு பெண்ணைக் கட்டிக்கொண்டு அலைகிறாய்? காட்டில் உனக்குத் தகுந்த மனைவி நான்தான். என்கூடச் சேர்ந்து எங்கும் சஞ்சரித்துச் சந்தோஷமாக இருப்பாய். நான் எந்த வடிவத்தையும் எடுப்பேன். பயப்படாதே. இந்தப் பெண்ணையும் உன் தம்பியையும் உடனே தின்று முடித்து விடுவேன். வா, என் கூடச் தயங்க வேண்டாம்" என்று காமத்தால் பீடிக்கப்பட்டு ராக்ஷஸ ஜாதியின் பண்பாட்டின்படி பிதற்றினாள்.

ராமனுக்கு இந்த அரக்கியின் காம விகாரமும் நடவடிக்கையும் பேச்சும் ஒரு விநோதமாக இருந்தது. சிரித்துவிட்டு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

"அழகியே! என்னைக் குறித்து நீ ஆசைப்படுவது உனக்குத் துன்பமாகும். இந்தப் பெண், என் மனைவியானவள் கூட இருக்கிறாள். இரண்டு மனைவிகள் வியாபாரம் தொந்தரவுக்கு இடமாகும். இது உனக்குத் தெரியுமல்லவா? இதோ இருக்கிறான் என்னுடைய தம்பி. தனியாக இருக்கிறான். அழகிலும் பலத்திலும் எனக்குச் சமம் இவன். உனக்குத் தகுந்த புருஷன். இவனைக் கேட்டுப் பார். என்னை விட்டுவிடு" என்றான். மேல் நடக்க வேண்டியதை லக்ஷ்மணன் பார்த்துக் கொள்வான் என்று இவ்வாறு ராமன் சொன்னான்.

அரக்கியும் ராமன் சொன்னபடி அவனை விட்டு விட்டு ராமனுடைய அழகுக்குக் குறையாத லக்ஷ்மணனை வரித்துப் பேச ஆரம்பித்தாள்: "வீரனே! வா என்னுடன். இருவரும் இந்தத் தண்டகாரண்யத்தில் சந்தோஷமாகக் கூடிக் குலாவித் திரியலாம்" என்றாள்.

லக்ஷ்மணனும் அண்ணன் ராமனுடைய பரிகாசத்தில் சேர்ந்து கொண்டு, "பைத்தியக்காரி, ஏமாந்து போகாதே! நீ யார்? நான் யார்? நான் அண்ணனுக்கு அடிமையாக இங்கே இருக்கிறேன். நீயோ அரச குமாரத்தி. ஓர் அடிமையைக் கட்டிக் கொண்டு அடிமைக்கு அடிமையாக நீ வாழலாமா? ஏமாந்து போகாதே. என் அண்ணன் ராமனுக்கு இரண்டாம் தாரமாக அமைவதே மேலானது. இந்தச் சீதைக்காக நீ பயப்பட வேண்டியதில்லை. ராமனுடைய காதல் உன் பேரில்தான் வேகம் கொள்ளும். சீதையை அலட்சியம் செய்து விடுவான். நீ சுகமாக இருக்கலாம்" என்றான்.

ஒரு பெண்ணை, அதிலும் காதல் கொண்ட பெண்ணை இப்படியெல்லாம் வேதனை செய்யலாமா என்று சில மேதாவிகள் கேட்கலாம். எதிரில் ஒரு விகார மிருக சொரூபத்தைத வைத்துக் கற்பனைச் சக்தியைப் பயன்படுத்தினால் அவ்வாறு கேட்க மாட்டார்கள்.

பிராகிருத கிராமிய வேகத்தால் பீடிக்கப்பட்ட அரக்கி லக்ஷ்மணனுடைய பேச்சை அப்படியே எடுத்துக்கொண்டு மறுபடியும் ராமனிடம் சென்று, பக்கத்தில் இருந்த சீதையைப் பார்த்தாள்.

''இந்தப் பூச்சியல்லவா எனக்கும் உனக்கும் இடையில் தடையாக இருக்கிறாள். வயிறு ஒட்டிப் போய்க் கிடக்கும் இவள் மேல் உனக்கு ஒரு மோகமா? இதோ இவளை இந்தக் கணம் முடித்து விடுகிறேன். உன்னை அடையாமல் நான் உயிருடன் இருக்க முடியாது. இவளை இப்போதே ஒழித்து விடுகிறேன். பிறகு நீ என்னுடன் சந்தோஷமாகச் சேருவாய்'' என்று சொல்லி அந்த அரக்கி சீதையின் மேல் ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்தாள்.

அந்தச் சமயம் ராமன் இடையில் புகுந்ததால் சீதை தப்பினாள். வேடிக்கை வலுத்துப் போயிற்று என்று எண்ணிய ராமன், ''லக்ஷ்மணா, இவளைப் பார்த்துக்கொள். சீதை எப்படியோ தப்பிப் பிழைத்தாள். இந்த அரக்கிக்குப் பாடம் கற்பிக்க வேண்டும்'' என்றான்.

லக்ஷ்மணன் உடனே கத்தியை எடுத்துச் சீதையைத் தாக்கிக் கொல்லப் போன அரக்கியை அங்கஹீனம் செய்து விட்டு, ''சீ! போ!'' என்றான்.

அவமானப்பட்டு ரத்த காய மடைந்த அரக்கி பெருங் குரலில் வீறிட்டு அழுது கொண்டு வனத்துக்குள் மறைந்தாள்.

* * *

ரத்தம் பெருக நேராக ஓடிப் போய் சூர்ப்பனகையானவள் கரன் இருந்த இடம் சென்று அவன் முன்னிலையில் ஆகாயத்திலிருந்து இடி விழுவதுபோல், ''ஐயோ!'' என்று அலறி விழுந்தாள்.

அரக்கர்கள் சூழ அமர்ந்திருந்த ராக்ஷஸத் தலைவனான கரன், 'என்ன சேதி?' என்று விசாரித்தான்.

''என்னைப் பார்! இந்த அநியாயத்தைச் செய்த ராமனும் லக்ஷ்மணனும் இந்தக் காட்டில் வசிக்கிறார்கள். நீயும் இருக்கிறாய்!'' என்றாள்.

கரன் எழுந்து, ''தங்காய்! என்ன இது? எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. புத்தி சுவாதீனம் செய்து கொண்டு, விவரமாகச் சொல். யார் உனக்கு இந்த அங்கஹீனம் செய்யத் துணிந்தது? இந்த வனத்தில் என் கோபத்துக்கு ஆளானது யார்? எவன் காக்கைக்கும் கழுகுக்கும் இரையாக விரும்பி உன்னை இப்படி அவமதித்தான்? சும்மா இருந்த கிருஷ்ண சர்ப்பத்தை யார் கால் விரலால் குத்தினது? அந்த மடையன் யார்? எங்கே? எல்லாம் விவரமாகச் சொல். இதோ அவன் மடியப் போகிறான்! அவன் ரத்தத்தை மண் உறிஞ்சிக் குடிக்கப் போகிறது. எழுந்து நின்று நடந்ததைச் சரியாகச் சொல்!'' என்றான்.

சூர்ப்பனகை சொன்னாள்:

''இரண்டு அழகிய மனிதர்கள். தசரதன் குமாரர்களாம், தவ வேஷம் பூண்டு ஒரு பெண்ணுடன் இந்தக் காட்டுக்கு வந்திருக்கிறார்கள். இவர்கள் இருவரும் ஒன்று சேர்ந்து கொண்டு அந்தப் பெண்ணைக் காரணமாக வைத்துக் கொண்டு என்னைத் தாக்கி இந்த அக்கிரமம் செய்து விட்டார்கள். இந்தத் துஷ்டர்களின் ரத்தத்தைக் குடிக்க ஆசைப்படுகிறேன். இவர்களை நீ வதம் செய்வாய். இதை நீ முதலில் செய்ய வேண்டும் தம்பி, பிறகு வேறு வேலை'' என்றாள்.

கரன் உடனே தன் சேனாதிபதிகளுக்கு உத்தரவிட்டான்: ''இந்தக் கணம் சென்று, அந்த இரு துஷ்டர்களையும் கொன்று, அவர்கள் பிரேதங்களை இவ்விடம் கொண்டு வாருங்கள். இவள் சொல்லும் பெண்ணையும் இழுத்து வாருங்கள். தாமதிக்க வேண்டாம்!'' என்றான்.

பதினான்கு சேனாதிபதிகளும் உடனே புறப்பட்டார்கள்.

கம்பருடைய ராமாயணத்தில் காதல் கொண்ட சூர்ப்பனகை ஓர் அழகிய மானிடப் பெண்ணின் வடிவம் கொண்டு ராமனை வரித்ததாக வைத்து, அதன் பேரில் நிகழ்ச்சிகள் தனிப் போக்கில் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. சூர்ப்பனகை நிகழ்ச்சியைக் கம்பர், வால்மீகியை விட்டுத் தனிப் போக்கில் கொண்டு போயிருக்கிறார். கம்ப ராமாயணத்தில் இது ஓர் அழகான கட்டம்.

ராமசந்திரனைப் பற்றி, 'இவன் பெண்ணைக் கொன்ற வீரன். காமம் மேலிட்டு அணுகிய ஒரு ஸ்திரீயை இவன் அவமதித்து ஹிம்சை செய்தான். மறைந்து நின்று வாலியைக் கொன்றான். எதிர்த்து நின்று அவனிடம் தோல்வி பெறத் துணியவில்லை. சீதையை அக்கிரமமாகக் காட்டுக்கு அனுப்பினான். அக்கிரமம் அல்ல என்றால் சீதையை அவன் சந்தேகப்பட்டான் அல்லவா? அவனுடைய சீலம் எமக்கும் ஐயமே' — இவ்வாறும் இன்னும் பல விதத்திலும் அருமையில் பிறந்த விமரிசனங்களில் இறங்கிச் சிலர் களிப்படைவதைக் காண்கிறோம். அறிவுக்கும் விமரிசன சாமர்த்தியத்துக்கும் நாட்டில் குறைவில்லை. அன்பும் ஆர்வமும் கலந்த சுத்த அறிவு காணவில்லை. ராமனுடைய குணத்தில் குற்றம் தேடுவோர்கள் தேடுக. ராமனை விட நல்ல முறையில் தருமத்தைக் கைப்பிடித்துத் தாங்கள் காட்டும் குறைவுகளின்றித் தங்கள் வாழ்க்கையை நடத்த முயல்வார்களானால் பிழைத்த ராமனுடைய ஆன்மாவும் ராம பக்தர்களுடைய உள்ளமும் பெருமகிழ்ச்சி அடையும். ராமனுடைய நற்குணங்களை விட்டு விடாமல் ராமனிடம் கண்ட குறைகளைத் தாம் அகற்றினால் யார் வேண்டாம் என்று கூறுவார்கள்? **(தொடரும்)**

CTC* டஸ்ட் டீ தரமான தேநீரின் சுவையையும் அழுத்தமான தேநீர் சத்தையும் அளிக்கிறது

# சூப்பர் டஸ்ட் கிடைப்பவற்றுள் மிகச்சிறந்த CTC டஸ்ட் டீ

ப்ரூக் பாண்ட்
நிபுணர்களால் பக்குவம்
செய்யப்பட்டிருப்பதே
அது சிறந்து
விளங்கக்காரணம்




* க்ரஷ், டியர், கர்ல் — இந்த தனிப்பட்ட டீ தயாரிக்கும் முறையானது விரைவில் கரையவும், மிகுந்த தேயிலைச்சத்துக்கிடைக்கவும் உறுதியளிக்கிறது.

BB 5356





[ ஒண்டுக்குடித்தனக்காரர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதற்காக இந்தக் கட்டுரை எழுதப்படவில்லை! ]

# அரண்மனையும் அந்தப்புரமும்

வி. கோபாலன்



'மன்னர் அந்தப்புரத்தில் இருக்கிறார்' என்றால் எந்தத் தலைபோகிற காரியமாக இருந்தாலும் சரி, எவரும் அவரை அணுகமாட்டார்கள். அப்போது ராஜாவின் பார்வை ராணியின் பக்கம் அல்லவா? ராணியின் பிரத்தியேக வாசஸ்தலமான அந்தப்புரத்தில் இருக்கும்போதுதான் அந்தக் கால ராஜாக்களுக்கு 'பிரைவேட் லைஃப்'; மற்ற சமயங்களில் எல்லாம் நாட்டு மக்களின் நலனை முக்கியமாகக் கொண்ட 'பப்ளிக் லைஃப்' தான்! அரச வாழ்வில் அரண்மனையும் அந்தப்புரமும் முக்கியமானவை. அரண்மனை மூலம் அந்தப்புரங்களைப் பிடித்தவர்களும் உண்டு; அந்தப்புரம் மூலம் அரண்மனைகளைப் பிடித்தவர்களும் உண்டு!

ராஜஸ்தானத்தில் குவாலியர் நகரிலுள்ள மான் மந்திர் என்னும் அரண்மனை கவர்ச்சித் தோற்றத்தையும், ஒப்பற்ற கலைப் பொருட்களையும் கொண்டிருக்கிறது. குவாலியரை ஆண்ட ராஜா மான்சிங் (1486 – 1516) என்ற மன்னன் கட்டிய அவ்வரண்மனை பல அடுக்குகள் கொண்டது. பல மாடங்களையும், உயர்வான வட்ட வடிவத் தூண்களையும் கொண்டிருக்கும் அந்த அரண்மனையைப் பார்த்துத்தான் பிற்காலத்தில் முகலாய மன்னர்கள் பாபரும் அக்பரும் தமது கோட்டைகளைக் கட்டினர். குவாலியர் மான்மந்திரில் அறைகள் சிறியனவாக உள்ளன. எனினும், அவற்றில் எழில்தவழும் ஜிந்துச் சிற்பங்களையும், கலைச் சின்னங்களையும் காணலாம். இந்த அரண்மனையின் சுவர்கள் கவர்ச்சிகரமான மேற்பூச்சு உடையவை; வண்ண அலங்காரங்கள் காண்போரைக் கவர்கின்றன.

குவாலியர் அரண்மனையைவிட அதிகச் சிற்பாலங்காரத்தையும், வண்ணப் பூச்சுக்களையும் மரத்தாலான பூ வேலைப்பாடுகளையும் ஜெய்ப்பூர் அரண்மனைகளில் காணலாம். ஜெய்ப்பூர் அரண்மனைகளில் ஹவா மஹால், சந்திர மஹால், ஷீஷ்மந்திர் ஆகியவை முக்கியமானவை. ஹவா மஹால் பல அடுக்குகள் கொண்டது. விசேஷமான சிவப்புக் கற்களால் அமைக்கப்பட்டுள்ள இவ்வரண்மனையின் தோற்றம் கவர்ச்சிகரமாகக் காண்கிறது.

ராஜஸ்தானத்தின் மிக முக்கியக் கட்டடமாக விளங்கும் 'ஜெய்ப்பூர் அரண்மனை'



1. குவாலியர் அரண்மனை.
2. (வலது) ஹம்பியில் இடிபாடுகளுடன் காணும் அரண்மனை.
3. ஜெய்ப்பூரிலுள்ள ஷீஷ்மந்திர்.
4. (கீழே) சேப்பாக்கத்திலுள்ள ஆர்க்காடு மகாராஜாவின் அரண்மனை.







சந்திரமஹால் என்றும் கூறப்படுகிறது. எல்லா அரண்மனைகளிலும் இது மிகப் பெரியது. 'மாட மாளிகை, கூடகோபுரம்' என்றெல்லாம் வருணிப்பார்கள் அல்லவா? இந்த அரண்மனையின் அழகை வருணிக்க அந்த வார்த்தை எல்லாம் போதாது. வண்ணச் சித்திரங்கள் வாய் திறந்து பேசுவது போல் அத்தனை தத்ரூபமாகக் காண்கின்றன. விலை மதிப்பற்ற ஆசனங்களும் அணி வகைகளும் சந்திரமஹாலைப் பூரண சந்திரனாகப் பொலியச் செய்கின்றன. இங்குள்ள கண்ணாடி மாளிகை உலகப் புகழ் பெற்றது.

ஜெய்ப்பூர் அரண்மனைகளைப் போன்றே கவர்ச்சியும் கம்பீரமும் மிக்க அரண்மனைகளை அம்பெர், பீகானீர், ஜோத்பூர், உதயபுரி ஜெய்சால்மீர், ஆர்ச்சா, தடியா ஆகிய இடங்களிலும் காணலாம்.

முகலாய மன்னர்களது அரண்மனைகளுக்கும் ஹிந்துப் பேரரசர்களது அரண்மனைகளுக்கும் அமைப்பில் பல வித்தியாசங்கள் உண்டு. ''ராஜமிருஹம்'' எனப்படும் ஹிந்து அரசரது மாளிகை பல அடுக்குகள் கொண்டிருக்கும். முகலாய வேந்தர்களது அரண்மனைகள் அகன்றதாகவும், பூந்தோட்டங்கள் உடையதாகவும் இருக்கும்.

தென்னிந்திய அரண்மனைகளுள், விஜய நகர அரசர்களின் வாசஸ்தலமாக விளங்கிய ஹம்பியிலுள்ள 'தாமரை மஹால்' அழகானது, பழைமையானது. 1575ஆம் ஆண்டில் தொடங்கிக் கட்டப் பெற்ற 'தாமரை மஹால்' இரு மாடிக் கட்டடமாகும்.

பதினேழாம் நூற்றாண்டளவில் சந்திரகிரி அரசரால் சந்திரகிரியில் கட்டப்பெற்ற பிரும்மாண்டமான அரண்மனை மூன்றடுக்கு கொண்டிருக்கிறது. சந்திரகிரி அரண்மனையின் சிகரப் பகுதியில் மத்தியிலும் இரு கோடியிலும் கோபுர அலங்காரச் சித்தரிப்புக் காணப்படுகிறது. செஞ்சிக் கோட்டை, மதுரை, மைசூர் திருமலை நாயக்கன் அரண்மனை ஆகியவை பிற்கால அரண்மனைகளுக்கு உதாரணங்கள். மைசூர் அரண்மனையில் சலவைக்கல் வேலைப்பாடு குறிப்பிடத்தக்கது. நவராத்திரித் திருநாளில் மைசூர் அரண்மனை வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்படுகிறது.

பொதுவாக அரண்மனைகள் ஐந்து முக்கிய பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும். அவை அரசனது மாளிகை, அரசவை, அந்தப்புரம், கஜானா, படைக்கோட்டை என்பவை.

அந்தப்புரம் அரண்மனைக்குள் ஒரு குட்டி அரண்மனைதான். ராணி (ராணிகள்?) வசிக்கும் அந்தப்புரத்தில் செல்வச் செழிப்புத் தாண்டவமிடும். அதையொட்டிப் பூந்தோட்டங்களும், குளங்களும் அமைந்திருக்கும். தங்கத்தாலான மயிலாசனங்கள், தந்தப் பதுமைகள், மயிலிறகாலான விசிறிகள், நவமணிகளாலான பேழைகள், ஊஞ்சல்கள் போன்றவை அந்தப்புரத்தை அலங்கரிப்பவை. ராணியும் கொஞ்சம் கலை ஆர்வம் உள்ளவளாக இருந்துவிட்டால் கேட்கவே வேண்டாம்; சித்திரமும் சிற்பமும் நளினக் கலைகளும் அந்தப்புரத்தில் சரணடைந்து

5. (மேலே) உதயபுரி அரண்மனை.
6. (வலது) சந்திரகிரி அரண்மனை.
7. ஜெய்ப்பூர் சந்திர மஹால்.
8. (கீழே) மின்விளக்கு அலங்காரத்துடன் மைசூர் அரண்மனை.



விடும். அந்தப்புரத்தில் ராணியும் அரசனும் சேர்ந்து உண்ணவும் உறங்கவும் உரையாடவும் தனித் தனி அறைகள் இருக்கும். கோபம் வந்தால் ராணி தலைவிரிகோலமாக வெறுந் தரையில் படுத்துக் கொள்ள ஆசனங்கள் எதுவும் போடாத ஓர் அறையும் உண்டாம். ஆதாரம்: வால்மீகி ராமாயணம்)

அந்தப்புரத்தில் திருமணமாகாத இளவரசியாக இருந்தால் அவள் பிறை பார்க்கிறாளா, இல்லையா என்பதைத் தோழி கவனிப்பாள்; பிறை பார்க்காவிட்டால் அவள் யாரையோ காதலிக்கிறாள் என்பதை அறிந்து கொண்டு, அவன் பேர் ஊரைக் கேட்டு அவனிடம் இளவரசிக்காகத் தூது போவாள். அப்புறம் என்னவெல்லாம் நடக்கும் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே!

கஜானா அரண்மனையில் இதயம் போன்ற ஒரு பகுதி. இது காலியானதால் சரித்திரத்தை முடித்துக் கொண்ட ராஜாக்களும் உண்டு. ராஜாவின் சரித்திரம் முடிந்ததால் காலியான கஜானாக்களும் உண்டு. கஜானா அறைக்குள் அறையாக மிக ரகசியமான ஓர் இடத்தில் அமைக்கப்பட்டிருக்கும்.

அரண்மனையையும், அரசையும் நாட்டையும் காக்கும் படைகளும் படைக்கலன்களும் பணிபுரியும் மாளிகை படைக்கோட்டை எனப்படுகிறது. இதைச் சுற்றி அகழிகள் உண்டு. போரில் படைக்கோட்டை விழுந்தால் அரசே விழுந்த மாதிரிதான்.

இன்று அரண்மனைகளில் சில அரசவம்சத்தாரிடம் இருக்கின்றன; சில அரசாங்க அலுவலகங்களாக மாற்றப்பட்டிருக்கின்றன. சில காட்சிப் பொருளாக இருக்கின்றன. கடைசியாகக் குறிப்பிட்டவை உல்லாச யாத்திரை போவோர் கண்டு களிக்கவும் 'ராஜாக் கதை'களைப் படமாக எடுக்கும் பட அதிபர்களுக்கும் பயன்படுகின்றன.

# படித்துப் பாருங்கள்

## புண்ணியவான் காந்தி

அந்நியர் ஆதிக்கத்தில் அகப்பட்டுக் கொண்டு அல்லற்பட்டு அவதியுற்ற பாரத நாட்டு மக்களுக்கு மகாத்மாவின் தென்னாப்பிரிக்க அறப் போர் அரசியல் விழிப்பைத் தந்தது. ஆனால் அக்காலத்தில், அந்த விழிப்புக்கு ஆதாரமாயிருந்த தென்னாப்பிரிக்க அறப் போர் பற்றிய செய்திகளை அவ்வப்போது அச்சமின்றி வெளியிட்ட பத்திரிகைகள் மிகக் குறைவு; செய்தி ஸ்தாபனங்களின் வசதியும் கிடையா. இந்த நிலையில் பழம் பெரும் தமிழ்ப் பத்திரிகையான சுதேசமித்திரன் மேற்படி தென்னாப்பிரிக்க இந்திய மக்களின் உரிமைப் போர் இயக்கத்துக்குப் பேராதரவு தந்தது. அப்போது சுதேசமித்திரனின் அருந் தொண்டுக்கு உதவி புரிந்தவர்கள், தென்னாப்பிரிக்கத் தமிழர்கள்! உரிமைப் போர் பற்றிய விஷயங்களைக் கடிதங்களாக எழுதி அனுப்பினார்கள். அக்கடிதங்களையெல்லாம் வெளியிட்டது மட்டுமின்றி, அவசியம் நேர்ந்தபோதெல்லாம் தென்னாப்பிரிக்க இந்தியர்களின் அவல நிலை பற்றியும், காந்தி மகான், அவர்களின் துன்பம் துடைக்க ஆற்றி வந்த அரும் பெரும் தொண்டுகள் பற்றியும் தலையங்கங்கள் எழுதி அரிய சேவை செய்தது சுதேசமித்திரன்.

பல ஆண்டுகளுக்குமுன் வெளியான செய்திகளை இப்போது ஒரு நூல் வடிவில் காண இயலுவது நம் பாக்கியமாகும். இந்த அரிய வாய்ப்பை நமக்கு அளித்திருப்பவர் திரு ஏ. கே. செட்டியார். சுதேசமித்திரன் காரியாலயத்துக்குச் சென்று பழைய பத்திரிகைகளிலிருந்து மேற்படி தகவல்களைத் திரட்டி ஒரு நூலாகத் தொகுக்க அவர் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டுள்ளார்.

திரு ஏ. கே. செட்டியார் பத்திரிகைகளில் வெளிவந்த தகவல்களை, தலையங்கங்களை மட்டும் தொகுத்து நூலாக்கி யிருந்தாரானால் அவருடைய தொண்டு பூர்த்தியானதாக இராது; அவர் தென்னாப்பிரிக்காவுக்கே பிரயாணம் செய்து காந்திஜி வசித்த இடங்களுக்கெல்லாம் போய், அவர் பழகிய நண்பர்கள் இருக்கும் இடங்களுக்கெல்லாம் சென்று, நேரடியான, உண்மையான தகவல்களைச் சேகரித்ததுதான் செட்டியார் அவர்களின் தொண்டுக்குத் தனிச் சிறப்பை அளித்து விட்டது. காந்தி சகாப்தத்தில், அவரின் நூற்றாண்டு விழாக் கொண்டாடும் தருணத்தில் மிகவும் பயனுள்ள வரலாற்றுச் சான்றுகள் அடங்கிய இந்நூலின் முதல் பாகம் வெளிவந்திருப்பது சாலப் பொருத்தமுடையதாகும்.

இந்நூல் அரும் பெரும் முயற்சி. படிக்கச் சுவையாக உள்ளது என்பதுடன் இன்றும், எதிர்காலத்திலும் சரித்திர ஆராய்ச்சியாளருக்கும் மாணவர்களுக்கும் பயனுள்ள நூல்.

பிரசுரம்: சுதேசமித்திரன், சென்னை -2; விலை: கலிக்கோ அமைப்பு: ரூ. 3.50; சாதா அமைப்பு: ரூ. 2.50.

## தந்திர பூமி

தந்திர பூமி என்ற இந்த நாவலில் அநாகரிகமாகத் தோற்றமளிக்கும் சில நாகரிக மனிதர்களைப் பற்றியும் நாகரிகமாகத் தோற்றமளிக்கும் சில அநாகரிக மனிதர்களைப் பற்றியும் இந்திரா பார்த்தசாரதி எழுதுகிறார். ஆசிரியரின் தலையீடின்றிக் கதாபாத்திரங்கள் தாங்களாகவே உரையாடல் மூலம் கதையை வளர்த்துக் கொண்டு போகிறார்கள். உரையாடலிலும் எதிர்பாராத திருப்பங்கள் இயல்பாக அமைந்திருப்பதால் சுவையாக இருக்கிறது. விரசமான விஷயங்களைச் சொன்னாலும் விரசமில்லாத நடையைக் கையாண்டிருப்பது சிறப்பு. ஆங்கிலச் சொற்கள் மிக அதிகம். இதைத் தவிர்த்தால் ஆங்கில அகராதியைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு படிக்க வேண்டிய தொல்லை இராது. அட்டைப்படம் ஒரு குழந்தை வரைந்தது போலிருக்கிறது; ஆனால் நாவலில் முதிர்ச்சி தெரிகிறது. 'ஐயோ சமூகம் இப்படியாகி விட்டதே' என்று அங்கலாய்க்காமல் சமூகத்தைக் - குறிப்பாக டில்லி சூழ்நிலையைப் - படம் பிடித்துக் காட்டுவதுடன் நிறுத்திக் கொள்கிறார்.

கிடைக்குமிடம்: தமிழ்ப் புத்தகாலயம், 576, மௌபிரேஸ் ரோடு, சென்னை-5; விலை: ரூ. 5-50.

**கா**ந்தி அடிகளின் அழைப்பை ஏற்று, தேசப் பணியில் இறங்கிய ஸ்ரீ வைத்தியநாத அய்யர் தமிழ் நாடு ஹரிஜன சேவா சங்கம் ஏற்பட்டதும் அதன் முதல் தலைவராகப் பொறுப்பேற்றுக் கொண்டது இயல்பே. காந்தியடிகளுடைய மனம் குளிரும் முறையில் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்கு ஹரிஜனங்களை அழைத்துச் சென்று, தரிசனம் செய்துவைத்த முதற் பெருமை அய்யர் அவர்களையே சேரும். 1938ஆம் ஆண்டில் திருவாங்கூர் மன்னர், ஹரிஜனங்களுக்கு ஆலயப் பிரவேச உரிமை அளித்துப் பிரகடனம் செய்ததும், அதே ஆண்டில் தமிழ் நாட்டிலும் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலுக்கு ஹரிஜன மக்களுடன் செல்ல வேண்டும் என்று அய்யர் அவர்கள் முயற்சி மேற்கொண்டார். அரசன் மகளாக அவதரித்து ஆட்சி பீடத்திலேறி அருள் பொழியும் தேவி



மதுரை வைத்தியநாத அய்யர்.

மீனாட்சி, அய்யர் அவர்களுக்கு, ஹரிஜனங்களுடன் தரிசனம் சாதிக்கத் திருவுளம் கொண்டாள். ஸ்ரீ சத்தியமூர்த்தி, தியாகராஜ சிவம் முதலியவர்களுடனும் ஹரிஜன அன்பர்களுடனும் மீனாட்சி ஆலயத்துக்குச் சென்று, திவ்விய தரிசனம் செய்தார். சனாதனிகள் கொதித்தெழுந்தார்கள். சட்ட மூலமும் பிற வகைகளிலும் நடவடிக்கை எடுப்பதில் முனைந்தார்கள். அன்று சென்னை மாகாண பிரதம மந்திரியாக இருந்த ராஜாஜி, சட்டச் சிக்கல்களைப் பிரித்தெடுத்து விட்டதால், அய்யர் அவர்களுடைய பணி வெற்றி பெற்றது. ஆயினும், சனாதனிகள் சும்மா இருக்கவில்லை. அய்யர் அவர்களுடைய தந்தை காலமான காலத்தில், வைதிகச் சடங்குகளைச் செய்ய முடியாமல் இடையூறுகளை விளைவித்தார்கள். ஆனால் அய்யர் அவர்கள் மனம் தளரவில்லை. அமைதியாக உழைத்தார். நாளாவட்டத்தில் எதிரிகளும் அவருடைய அன்பர்களாக மாறினார்கள். காந்திஜி, அய்யர் அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, 1946ஆம் ஆண்டில் தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்த போது, மதுரைக்குச் சென்று திருவருள் ஆட்சி செலுத்



திக் கொண்டிருக்கும் மீனாட்சியையும் சுந்தரேசுவரரையும் உளம் குளிரத் தரிசித்தார்.

**ச**லியாத உழைப்பும், சிக்கலான பிரச்னைகளைக்கூட அமைதியான முறையில் சமாளிக்கும் சாமர்த்தியமும் உடைய அய்யர் அவர்கள் 1890ல் பிறந்தார். சட்டக் கல்லூரியில்

# வாழத் தெரிந்த வைத்தியநாத அய்யர்

தேறியதும் மதுரையில் வழக்கறிஞராக வாழ்க்கையைத் தொடங்கினார். காந்திஜி ஒத்துழையாமை இயக்கம் தொடங்கியதும் அய்யர் அவர்களுடைய கவனம் திரும்பிற்று. 1922ம் ஆண்டிலிருந்து தேசத் தொண்டில் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொண்டு உழைக்கலானார். கள்ளுக்கடை மறியல், அந்நியத் துணி



எரிப்பு, கிராம நலன் எனப் பல துறைகளில் ஈடுபட்ட அய்யர் அவர்கள், மதுரை மாவட்டத்தில், முதல் முதலாகக் கதர் உற்பத்தி செய்வதிலும் கவனம் செலுத்தினார்.

அந்தக் காலத்தில், மதுரை ஜில்லாவில் ஜமீந்தார்களுடைய செல்வாக்கு அதிகம்.

தேசப் பணியை ஒடுக்குவதில் தனி அக்கறையுடைய அதிகார வர்க்கமும் ஜமீந்தார்களுக்கு ஆதரவு தந்தது. ஆதலால் ஜமீன் பகுதிகளில் தேசபக்தி இருந்தாலும் வெளிப்பட்டு வீசவில்லை. உயிருக்குத் துணிந்த சில தேசத் தொண்டர்கள் ஜமீன் பகுதிகளில் சென்று பிரசாரம் செய்வதுண்டு. 1922ல் ஒரு நாள் பேரையூரில் பொதுக் கூட்டம் நடத்த தேசத் தொண்டர்கள் ஏற்பாடு செய்தனர். அதை அறிந்த ஜமீன்தார், போலீஸ் இன்ஸ்பெக்டருடைய வேண்டுகோளுக்கு இணங்கி, 'கூட்டத்துக்கு யாரும் போகக் கூடாது' என்று தண்டோரா போடச் செய்தார். ஆயினும், சிலர் தைரியமாகக் கூட்டத்துக்கு வந்தார்கள். ஜமீன்தார்களுடைய கையாட்களோ கூட்டத்தைக் கலைப்பதில் முனைந்து, மல வண்டி ஒன்றை இழுத்து வந்து அசுத்தம் செய்து கூட்டம் நடைபெறாதபடி செய்தார்கள். இந்தச் செய்தியை அறிந்த அய்யர் அவர்கள் மறுநாள் கூட்டத்துக்குப் பேரையூர் வந்தார். தொண்டர்களுடன் ஊர்வலமாகக் கிளம்பி, தெருச் சந்திகளில் நின்று நின்று மக்களை அமைதியாக இருக்கும்படி வேண்டிக் கொண்டதுடன், ஜமீன்தாருடைய அரண்மனை வாசலில் கூட்டத்தை நடத்தினார். காலிகள் திகைத்தார்கள். ஜமீன்தாரோ மனம் மாறி, அய்யர் அவர்களை எதிர்கொண்டழைத்து, தாமே முன்னின்று கூட்டத்தை நடத்தினார்.

ஒரு சமயம் அய்யர் அவர்கள் கிராமம் கிராமமாகச் சென்று மதுவிலக்குப் பிரசாரம் செய்தபோது வெள்ளலூர் என்ற கிராமத்துக்குச் சென்றார். கள்ளர் இனத்தைச் சேர்ந்த மக்கள் நிறைந்த அந்தக் கிராமத்தில் நாட்டாண்மைக்காரருடைய அனுமதியுடன் தான் கூட்டம் நடைபெறுவது வழக்கம். கூட்டத்தில் உரையாற்றுவோர் சட்டை போட்டுக் கொள்ளக் கூடாது என்ற கட்டுப்பாடு. அய்யர் அவர்கள் தம்முடைய வாக்சாதுரியத்தால் கூட்டம் நடத்த ஏற்பாடு செய்ததுடன், கட்டுப்பாட்டுக்கிணங்க, தம் சட்டையைக் கழற்றிவிட்டுக் கூட்டத்தில் உரையாற்றினார். அய்யர் அவர்களுடைய கட்டுப்பாடு உணர்ச்சியைக் கண்ட மக்கள், கரகோஷத்துடன் ஆரவாரம் செய்ததுடன், அவருடைய சொற்பொழிவை அமைதியாகக் கேட்டார்கள். பலர், அவருடைய முன்னிலையில் குடிப் பழக்கத்தை விடுவதாகப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்கள்.

வேதாரண்யத்துக்குச் சென்று உப்பு சத்தியாக்கிரகம் செய்வதற்கு, ராஜாஜி திட்டமிட்டார். அவருடன் சென்ற நூறு தொண்டர்களில் 24 பேர்கள் மதுரைவாசிகள். இயக்கம் நடப்பதற்குத் தொண்டர்களையும் நிதியும் திரட்டி அனுப்பிய அய்யர் அவர்கள், போராட்ட நிலைமையைக் கவனிப்பதற்காக வேதாரண்யத்துக்குச் சென்றபோது, அவரையும் ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரியாரையும் போலீஸார் தாக்கி, மூர்ச்சித்து விழும் வரையில் தடியால் அடித்து ஒரு பர்லாங் தூரம் வரையில் இழுத்துச் சென்றார்கள். பின்னர் கைது செய்து விசாரணை நடத்தி ஆறு மாதம் கடுங்காவல் அளித்தார்கள்.

காந்தி — இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டதும், அய்யர் அவர்கள் விடுதலையடைந்து அந்நியத் துணிக் கடை மறியல், மதுவிலக்கு முதலியவற்றில் ஈடுபட்டார்.

1932ல் தேசியப் போராட்டம் தொடங்கியதும் அய்யர் அவர்களுடன் அவருடைய மனைவி திருவாட்டி அகிலாண்டம் அம்மையாரும் கலந்து கொண்டார். அய்யர் அவர்களுக்கு ஓராண்டு சிறைத் தண்டனை கிடைத்தது. அவருடைய மனைவிக்கு ஆறு மாதம் சிறைத் தண்டனையும் 800 ரூபாய் அபராதமும் கிடைத்தன. அம்மையார் அபராதம் செலுத்த மறுத்து விட்டதால், வீட்டில் உள்ள மோட்டாரை ஜப்தி செய்து ஏலம் போட்டு, அபராதத் தொகையை வசூலிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்தது. ஆனால் அரசாங்கம் பலதடவைகளில் காரை ஏலம் கூறி விற்பனை செய்ய முயன்றும் எவரும் ஏலம் கேட்க முன்வரவில்லை.

1940-ல் அரசியல் தேக்க நிலை ஏற்பட்டபோது அய்யர் அவர்களுடைய கவனம் நிர்மாணத் திட்டத்தில் இருந்தது. தனி நபர் சத்தியாக்கிரகத்தில் அவருடைய மனைவி பங்கெடுத்துக் கொண்டு சிறை சென்றார். 1942ல் காந்திஜி கைதானதும் நாட்டில் கொந்தளிப்பு ஏற்பட்டது. தேசப் போராட்டத்தில் முன்னணியில் நிற்கும் மதுரை மக்கள் ஆவேசத்துடன் கிளம்பினார்கள். கடையடைப்புச் செய்தார்கள். மதுரையில் 144 தடை உத்தரவு போடப்பட்டது. அய்யர் அவர்கள் வெகுண்டு எழுந்தார். திலகர் சதுக்கத்தில் பொதுக்கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தார். போலீஸ் கெடுபிடி மிகுதியாக இருந்தும், மக்கள் தடையுத்தரவைப் பொருட்படுத்தாமல் கூட்டத்துக்கு வந்தார்கள். ''காந்திஜியின் நிர்மாணத் திட்டத்தையும் அவருடைய போராட்டங்களையும் திறம்பட நடத்தியது போல இந்த இறுதிப் போராட்டத்திலும் மதுரை மக்கள் சிறப்பாகச் செயலாற்ற வேண்டும்'' என்று அய்யர் அவர்கள் பொதுக்கூட்டத்தில் பேசியதை மக்கள் ஆரவாரத்துடன் ஏற்றுக் கொண்டனர். தடை உத்தரவை மீறியதற்காக அய்யர் அவர்கள் மீது சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொண்டு ஓராண்டு சிறைத் தண்டனை யளித்தது; சிறைத் தண்டனை முடிந்ததும் அவரைக் காவலில் வைத்தது.

நாடு விடுதலை யடைந்த பிறகும் அய்யர் அவர்கள் தீவிரமாக அரசியலில் பணியாற்றினார். சட்ட சபையிலும் வெளியிலும் அவர் ஆற்றிய பணி குறிப்பிடத் தக்கது. வழக்கறிஞராகத் தொழிலாற்றிய அவர், தேசப் பணிக்கு உடலுழைப்பைத் தந்ததைப்போல் தம்முடைய ஊதியத்தில் பெரும் பகுதியையும் வழங்கி வந்தார். அஞ்சா நெஞ்சமும் அயராத உழைப்பும், தன்னலமற்ற சேவையும் ஆற்றிய அவர் சிறந்த காந்தியவாதியாக வாழ்ந்து தமது 66ஆம் வயதில் 23—2—1955 அன்று புகழுடம்பு எய்தினார். மதுரை நகர சபையினர் அவருக்குச் சிலை எழுப்பி அஞ்சலி செய்தது சிறப்புடைய செயலாகும்.

— கே. எஸ். ஜம்புநாதன்

# அத்தியாயம் 6

ரூபகுமார் வாசுவின் ஆபீசுக்குப் போயிருந்தபோது மானேஜர் அறையில் வாசு விடுமுறைக்கு எழுதியிருந்த விண்ணப்பத் தாளைப் பார்த்து விட்டான். அதில் தான் எங்கோ வெளியூருக்குப் போக வேண்டியிருப்பதாக வாசு எழுதியிருந்தான். அந்த வேளைக்கு அது ஏதோ சாதாரண நிகழ்ச்சியாகத் தான் ரூபகுமாருக்குத் தோன்றியது.

''இவருக்கு லீவு அனுமதி கொடுத்து விட்டீர்களா?'' ரூபகுமார் மானேஜரைக் கேட்டான்.

''அனுமதி கொடுத்து விட்டோம். சாதாரணமாக லீவே எடுக்காதவர் இப்போது எடுக்கிறார் என்றால் ஏதாவது விசேஷம் இருக்கத்தானே செய்யும்!'' உள்ளர்த்தம் வைத்துப் பேசினார் மானேஜர்: ''திருமண அழைப்பிதழைச் சீக்கிரமே எதிர் பார்க்கலாம்.''

சுருக்கென மனத்தில் தைப்பதுபோல் ரூபகுமார் உணர்ந்தான்.

''ஓ! ரமாவைப் பற்றிச் சொல்கிறீர்களா?''

'' உங்களுக்கு அந்தப் பெண்ணைத் தெரியுமா?''

''என் மாமா பெண் தானே அவள்!''

''என்ன?'' மானேஜர் முகத்தில் ஆச்சரியக் குறி தோன்றியது. ''அப்போ வாசு அதிர்ஷ்டசாலிதான். காதலிக்கு உறவினரே டைரக்டர் என்றால்...''

ரூபகுமாருக்கு அதற்கு மேல் கேட்கப் பிடிக்க வில்லை. டக்கென்று எழுந்தான். விடுவிடுனக் காரை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

வாசுவின் வீட்டு வாசலில் போய்த் தான் அவன் கார் நின்றது.

''வாசு இருக்கிறாரா ?'' சிப்பந்திகளுக்கு ரூபகுமார் தவறாமல் மரியாதை கொடுப்பான்.

''இல்லையே ! நீங்கள் யார் ?''

''நான் அவருடைய நண்பன். நீங்கள்...''

''நான் அம்மா.''

''வாசு இன்று காலை என் வீட்டுக்கு வருவதாகச் சொல்லியிருந்தார் !''

''விலாசம் கொடுத்துப் போங்க!..... இரவு வரச் சொல்கிறேன்!''

''இரவே திரும்புவாரா ?''

''திரும்பாமலென்ன ? மகாபலிபுரம் வரையில்தானே போயிருக்கிறான்!'' முதலில் இடத்தைச் சொல்லாமல் கவனமாக இருந்தவள், அடுத்துப் பேசும்போது கவனப் பிசகாகக் கூறிவிட்டாள்.

ரூபகுமாருக்கு இனி விளக்கம் தேவையில்லை. வாசுவும் ரமாவும்தான் கிளம்பி யிருக்கிறார்கள் !

காரைக் கிளப்பினான் ரூபகுமார்.

''என்னது? என் அம்மாவா கூறினாள்?'' என்று வாசு படபடத்துக் கேட்டான்.

'' ஏன் இப்படியோர் ஆத்திரம் ? லீவு எடுத்திருக்கிறீர்களே, வீட்டில் சிறிது நேரம் பேசிக் கொண்டிருக்கலாமே என்று போனேன். அங்கு உங்கள் அம்மா கூறினார்.''




வாசு பல்லை நறநற வென்று கடித்துக் கொண்டான். உடலெல்லாம் பற்றி எரிந்தது. ரூபகுமாரின் மீது அவனுக்கு எல்லையற்ற ஆத்திரம் தோன்றியது.

''ரமா!'' ரூபகுமார் மீண்டும் குரல் கொடுத்தான்.

''தயவுசெய்து நீங்கள் போய் வாருங்கள். நான் உங்களுடன் வரத் தயாராயில்லை.'' ரமா பட்டென்று பதில் அளித்தாள்.

''கலபமாகச் சொல்லி விட்டாய் நீ. இப்படி நடுத் தெருவில் என் மாமன்

மகளை விட்டு விட்டுப் போக எனக்கு மனம் வருமா?'' என்றான் ரூபகுமார்.

ரமா வாசுவை நோக்கி, ''ரூபகுமார் இவ்வளவு சொல்லும்போது நாம் கேட்காமல் இருந்தால் நன்றாயிராது, வாசு! நீங்களும் ஸ்கூட்டரைத் தூக்கிக் காரில் போட்டுக் கொண்டு கிளம்புங்கள். சென்னைக்கே போய் ரிப்பேர் செய்து கொள்ளலாம்'' என்றாள்.

''வேண்டாம், ரமா! உன்னைப் பத்திரமாக வீட்டில் சேர்ப்பது என் பொறுப்பு! நாம் இவருக்கு ஏன் தொல்லை தர வேண்டும்?'' என்றான் வாசு.



அதே நேரத்தில் டாக்ஸி ஒன்று ஹாரன் அடித்தவாறே பின்னால் வந்து நின்றது, குறுக்கே நின்று கொண்டிருந்த ரூபகுமாரின் காரை நகர்த்தி வழிவிடக் கோரும் முறையில்.

கார் நகரவில்லையாதலால் டாக்ஸி டிரைவரோடு அதில் அமர்ந்திருந்த ஆனந்த் இறங்கி வந்தான்.

''அடப் பாவி, நீயா இப்படி வழி மறைத்து நிற்கிறாய்? என்னடா கேடு வந்து விட்டது உனக்கு?'' வாசுவிடம் கேட்டான் ஆனந்த்.

''எனக்கு ஒரு கேடும் வரவில்லை. என் வாகனம்தான் சண்டித்தனம் செய்து விட்டது!'' என்று கூறி ஸ்கூட்டரைக் காட்டினான் வாசு.

''எங்கே புறப்பட்டே?''

''சும்மா ரமாவோடு மகாபலிபுரம் வரை கிளம்பினேன்!''

''இவர்?''

''எங்கள் ஆபீஸ் டைரக்டர்!''

''அதோடு ரமாவின் அத்தை பிள்ளை!'' என்றான் ரூபகுமார்.

''அப்படியா? இவர் எங்கே இப்படி...?''

''இவரும் மகாபலிபுரம்தான் போய்க்கொண்டிருந்தார். வழியில் நாங்கள் நிற்பதைப் பார்த்துவிட்டு...''

''பாவம், அவருக்குப் போய் எதற்கடா சிரமம் தருகிறாய்? அவரை விடு. தம் காரியத்தைக் கவனிக்க அவர் போகட்டும். நீ இந்த டாக்ஸியில் ரமாவுடன் சென்னைக்குப் போ! பக்கத்துக் கிராமத்தில் எனக்கு நண்பர் ஒருவர் இருக்கிறார். அவரிடம் ஸ்கூட்டரை ஒப்படைத்துவிட்டு நான் பஸ்ஸில் வருகிறேன்!'' என்றான் ஆனந்த்.

அமிர்ததாரை பொழிவதுபோல் இருந்தது அவன் பேச்சு. ரமா அவனை நன்றியுடன் நோக்கினாள்.

''ஏய், நீ எதுக்கடா ஸ்கூட்டரைத் தள்ளணும்?''

வாசு ஆரம்பித்தான்.

''அதைப் பற்றி கேட்க நீ யார்? என் இஷ்டம்!'' என்றான் ஆனந்த்.

ரூபகுமார் தன் திட்டம் பாழாகி விடவே, காரைச் சென்னைக்கே திருப்பினான். அசுர வேகத்தில் அது புழுதியைக் கிளப்பிக் கொண்டு மறைந்தது.

* * *

டிரிங், டிரிங்!

ரமா போனைக் கையில் எடுத்தாள்.

''ஹலோ... யார்? காந்தியா? எங்கு இருந்தடி பேசுகிறாய்...... என்னது. சினிமாவிலிருந்தா?''

''ஆமாம்... நீ உன் தோழியைப் பார்த்துவிட்டு வந்திருப்பாய் என்றுதான் இடைவேளையில் சினிமாவிலிருந்தே பேசுகிறேன்.''

''இப்பத்தான் வந்தேன். இதென்ன திடீரென்று சினிமாவில் நுழைந்து விட்டாய் தனியாக?''

''தனியாக இல்லை..... என்னோடு வாசுவின் நண்பர் ஆனந்தும் வந்திருக்கிறார்.''

''என்னது? ஆனந்தா? உண்மையாகவா?''

''பின்னே என்னோடு வாசுவா வருவார்? நான் வருவதற்குத் தாமதமானால் நீ கவலைப்படுவாயே என்றுதான் போன் செய்கிறேன். அப்பா கேட்டாலும் தகுந்த துணையுடன் வந்துவிடுவேன் என்று சொல்லு.''

''ஏய், சீரியஸ்ஸாகக் கேக்கறேன். ஆனந்தா வந்திருக்கிறார்?''

''கூப்பிட்டுப் பேசச் சொல்லட்டுமா?''

''நீ சொன்னால் போதும்.... இரு. இடைவேளை கழிந்து மணி அடிப்பது



போல் காதில் விழுகிறதே.... ஓடு, நீ போய் சினிமா பார்.... வீட்டுக்கு வா, சொல்றேன்....''

போன் பேச்சு முடிந்ததும் ரமாவின் மனத்தில் ஒரு குதூகல உணர்ச்சி கொப்புளித்தது.

'காந்தி ஆனந்துடன் சினிமாவுக்குப் போயிருக்கிறாள்.... இதற்கு என்ன பொருள்? சாதாரணமாக ஆனந்த் இப்படி எங்கேயும் கிளம்ப மாட்டாரே! திடீரென்று கிளம்பி யிருக்கிறார்களா? அல்லது முன்னேற்பாடா? காந்தி இன்று பீச்சுக்குப் போவதாக அல்லவோ கூறினாள்? கள்ளி, என்னிடமே மறைத்திருக்கிறாள்! அப்படியானால் போனில் கூப்பிட்டு ஏன் கூற வேண்டும்? இதில் ஏதோ மர்மம் இருக்கிறது! இதற்கு முன்பும் இப்படிப் போயிருப்பார்களோ!'

இந்த யோசனையின் தொடர்ச்சி அன்றொரு நாள் அவள் பார்த்ததை நினைவு படுத்தியது. 'ஆம், ஒரு புகைப்படத்தைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தாளே காந்தி! அந்தப் புகைப்படம் ஆனந்தினுடையதாகத்தான் இருக்க வேண்டும். அசட்டுப் பெண் என்னிடம் எதற்கு மறைக்க வேண்டும்? என்னிடம் சொன்னால் நானே முன் நின்று எல்லா ஏற்பாடுகளையும் செய்வேனே....

'எதற்கும் இப்போதே அப்பாவிடம் போய்ச் சொல்லிவிட வேண்டும்.'

மகிழ்ச்சியுடன் ரமா தந்தையிடம் ஓடினாள். அவர் அன்று தம் அறையில் தனியாகத்தான் இருந்தார்.

''அப்பா!''

''என்னம்மா ரமா?''

''வேலை ஒன்றுமில்லையே?''

கோசல்ராம் மெல்லச் சிரித்துவிட்டு, ''வேலை இல்லை என்பது உண்டாம்மா? சொல்லவந்ததைச் சொல்'' என்றார்.

''அப்பா! காந்திக்கு வயதாகிறது. எனக்கும் அவளுக்கும் வயது வித்தியாசம் அதிகமில்லையே. அவள் படிப்பையும் முடித்து விட்டாள்!''

''....ம்...''

''அவளுடைய விவாகத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டாமா?''

கோசல்ராம் சிரித்து விட்டார். ''பெரியவளான உனக்கே இன்னும் முடியவில்லையே!''

''இருவருக்கும் சேர்த்து நடத்தினால் செலவு குறையுமே!''

''மெய்தான். இருந்தாலும் மாப்பிள்ளை கிடைக்க வேண்டாமா?''

''அப்பா, வாசுவின் நண்பர் ஆனந்த் இருக்கிறாரே, அவர் மிகவும் நல்லவர்... நான் நினைக்கிறேன், நம் காந்திக்கும் அவருக்கும்....''

''காதல் முளைத்து விட்டதா அட கடவுளே!''

''இதென்னப்பா 'அட கடவுளே' என்கிறீர்கள்!''

''அதற்கில்லையம்மா, நான் வேறு விதமாக.....''

அவர் கூறி முடிப்பதற்குள் அத்தை வந்து விட்டாள். அவள் எதிரே பேச விரும்பாத ரமா அந்த உரையாடலுக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டாள்.

* * *

**வீ**ட்டில் ஒரே அமர்க்களம். பொன்னம்மாவின் பெயருக்கு ஒரு தந்தி வந்திருந்தது. அவள் மருமகள் ருக்மிணி பம்பாயிலிருந்து அடித்திருந்தாள்.

'உங்கள் மகனுக்கு உடல் நலமில்லை. அபாய கட்டம். உடனே புறப்பட்டு வரவும்.'

பொன்னம்மா பெரிதாகக் குரலெடுத்து அழவே ஆரம்பித்து விட்டாள். ''நான் என்ன பாவம் செஞ்சேன், கடவுளே! அவனுக்கு நோயாமே! யார் கண்ணு போட்டுத் தொலைச்சுட்டாங்க? எனக்கு அப்பொழுதே தெரியும். இந்த ருக்கு வீட்டுக்காரங்கதான் இப்படிச் செஞ்சிருப்பாங்க... அவ நல்லாயிருப்பாளா, அவ அம்மா நல்லா இருப்பாளா?...''

''அத்தை, கொஞ்சம் அழுகையை நிறுத்திட்டு விஷயத்தைச் சொல்லுங்களேன்'' என்றாள் காந்தி.

பொன்னம்மாவுக்கு ஒரே மகன். நீலகண்டன் என்று பெயர். நீலு என்றுதான் கூப்பிடுவாள். பாசத்தை யெல்லாம் கொட்டி அவனை வளர்த்தாள். கண்டிப்பில் வளர்ந்த அவன் அம்மாவுக்கு அடங்கிய பிள்ளையாகத்தான் இருந்தான்.

ருக்மிணியின் கரம் பற்றியபின் நீலகண்டனால் பழைய நீலகண்டனாக இருக்க முடியவில்லை. மனைவியோடு பேசுவதற்குத் தாயார் நூற்றி நாற்பத்துநாலு தடுப்புச் சட்டம் போடுவதை அவன் விரும்பவில்லை. எனவே, பெண்சாதியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு பம்பாய்க்குச் சென்று மாமனாரின் வீட்டோடு ஐக்கியமாகி விட்டான்.

மகன் ஓடிவிட்டானே என்ற ஆதங்கத்தில் பொன்னம்மா அவனை முகாலோபனம்கூடச் செய்ய விரும்பாதவளாகத்தான் இருந்தாள். ஆனால் அவனுக்கு ஆபத்து என்று அறிந்ததும் தவியாய்த் தவித்து விட்டாள். அவள் சென்னையில் இருப்பதை அறிந்து எப்படியோ தந்தியும் அடித்து விட்டார்களே!

''அத்தை! நீங்க இங்கே இருப்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று ரமா ஆரம்பித்தாள்.

''அவனுக்கா தெரியாது? அவள் மந்திரக்காரி, மாயக்காரி. ஏவல்கூட வெச்சிடுவாளே. அதனுல்தானே என் மகனுக்குச் சொக்குப் பொடி போட்டு மக்குப் பையனாக ஆக்கி விட்டாள். ஐயோ! நான் இப்ப என்ன செய்வேன்? என் மகனைப் பார்ப்பேனு... அடே நீனு! நீ எப்படிடா படுக்கை போட்டே? எங்கிட்டே இருந்தவரைக்கும் தலை நோவுன்னுகூடப் படுக்கமாட்டியேடா?'' புலம்பினுள் பொன்னம்மா.

''என்ன அமர்க்களம்?'' என்று கேட்டுக் கொண்டே வெளியே சென்றிருந்த கோசல்ராம் வந்தார்.

விவரம் தெரிந்ததும், ''விமான நிலையத்திலிருந்து வீட்டுக்குப் போக வழி தெரியுமா?'' என்று கேட்டார்.

''தெரியாமல் என்னடா? வாயில் இருக்கிறது வழி'' என்று பொன்னம்மா குதூகலத்துடன் கூறினுள். மகனைப் பார்க்கப் போகிறோம் என்பதைவிட விமானப் பிரயாணம் கிடைத்த ஆனந்தத்தில் மிதந்தாள்.

கோசல்ராம் அவளுடன் அதிக நேரம் பேசிக் கொண்டிருக்கவில்லை. அன்றைய தினமே பம்பாய் செல்லும் விமானத்தில் இடம் இருக்குமா என்று போனில் கேட்டார். ஒருவர் தம் பிரயாணத்தை ரத்து செய்திருந்ததால் — அந்த டிக்கெட் அவருக்குக் கிடைத்து விட்டது.

பொன்னம்மா புறப்பட்டு விட்டாள். கோசல்ராம் விமானம் ஏற்றிவிட அவளோடு புறப்பட்டார். பொன்னம்மாவோ, ''ரமா, காந்தி! நான் சீக்கிரமே திரும்பிடறேன். கண்டபடி அலைஞ்சுக்கிட்டு இல்லாமெ சமர்த்தா வீட்டோடு இருங்க....'' என்று போகிற போக்கில் ஓர் உபதேசத்தையும் உதிர்த்து விட்டுச் சென்றுள்.

ரமாவும் காந்தியும் நிம்மதியாக மூச்சு விட்டனர்.

* * *

ரமாவும் காந்தியும் அத்தையின் விசித்திரக் குணத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது வாசலில் கார் ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து ரூபகுமார் இறங்கி வந்தான்.

இருவருக்குமே திக்கென்றது.

ரமா சிலைபோல் நின்று விட்ட போது காந்தி மட்டும் வரவேற்கும் பாவனையில் தலையை ஆட்டி வைத்தாள்.

ரூபகுமார் தானுகவே அருகில் இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டான். பிறகு, ''அப்பா இல்லையா?... இருவரும் உட்காருங்களேன். எனக்கு ஏன்

**அலாதிச் சிரிப்பு!**



ஆங்கிலப் படம்
அவசியம் வரும்படி
அழைத்தார் அன்பர்.
போனேன். பார்த்தேன்.
திடீரென---
கொட்டகை அதிரச்
சிரிப்பொலி எழுந்தது!
எங்கும் சிரிப்பு! எங்கும் சிரிப்பு!
நண்பரை மெல்லத்
தட்டிக் கேட்டேன்:
''என்ன ஹாஸ்யம்?''
நண்பர் முறைத்தார்:
''இழவு ஹாஸ்யம்
நானும் அறியேன்.
நீரும் இப்போ
சேர்ந்து சிரியும்!
அதுவே பாஷன்!''
அடுத்த சிரிப்பு
எழுந்தபோது--
அடியேன் தொண்டை
அன்றி, போங்கள்!

—எஸ். கௌசல்யா

நின்று மரியாதை செலுத்துகிறீர்கள்?'' என்று கேட்டான். ரமா உட்கார்ந்து விட்டாள். காந்தியோ, ''மரியாதைக்கான பொருளில் நாங்கள் நிற்கவில்லை. ஏதோ ஓரிரண்டு வார்த்தைகள் பேசி விட்டுப் போய்விடுவீர்கள். அதற்கென்று ஒரு முறை உட்கார்ந்து எழுந்திருக்கும் சிரமத்தை ஏற்பானேன் என்றுதான் நின்றிருந்தோம்....'' என்றுள்.

''உறவுக்காரர்கள் வீடுகளுக்கெல்லாம் இப்படி மேலோடு வந்துவிட்டுப் போவது நன்றுக இருக்குமா? அது முறையும் இல்லையே! ஏன் ரமா! நமக்குள்ள உறவுமுறை தெரியும் அல்லவா?''

''அத்தை சொன்ன உறவுதானே?''

''ஆமாம்!''

''அவள் ஊருக்குப் போய் விட்டதால் இனி அந்த உறவைக் கத்திரித்து விட வேண்டியதுதான்!''

விருட்டென்று எழுந்தான் ரூபகுமார். ''உங்களுக்கு மாமன் மகன் உறவு அவசியமில்லாமல் இருக்கலாம். ஆனுல் இந்தப் பெரியம்மாவை வைத்துக் கொண்டே வேறு உறவை நிலைநாட்டிக் கொள்ளுகிறேனு இல்லையா என்று பாருங்கள்!'' சவாலாகக் கூறிவிட்டு அவன் வேகமாக வாசலுக்குச் சென்றுன்.

அவன் சவாலை எடுத்துக் காட்டுவது போல் புழுதி மண்ணை வாரி இறைத்துக் கொண்டு கார் புறப்பட்டு விட்டது.

காந்தி ஒன்றுமே நடவாதது போல் ஒரு புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டாள். ரமாவோ தவித்து விட்டாள்.

''காந்தி, என்ன இப்படி அமைதியாக இருக்கிறாய்?...அத்தை திரும்பியதும்....''

''அத்தை திரும்பும் போது பார்த்துக் கொள்ளலாம்.''

அவள் எந்த நேரத்தில் அப்படிச் சொன்னாளோ, அத்தை சென்ற விமானத்துக்கு விபத்து ஏற்பட்டு விட்டது. அதில் சென்ற பிரயாணிகள் யாருமே உயிர் தப்பவில்லை.

'விமானப் பயணத்துக்கு ஆசைப் பட்டாளே? இப்படியா முடிவு வர வேண்டும்?'

அத்தையை நினைந்து வருத்தப்பட்டாலும் ரூபகுமாரின் வலையிலிருந்து தப்ப ஒரு வழி ஏற்பட்டுவிட்ட நினைப்பில் ரமா நிம்மதியாக மூச்சு விட்டாள்.

* * *

வியாபார விஷயமாகப் பேச வேண்டியிருப்பதால் உடனே புறப்பட்டு வருமாறு கோசல்ராம் ரூபகுமாருக்கு ஃபோன் செய்து கொண்டிருந்தார்.

அதைக் கேட்டதும் ரமாவின் நிம்மதி கலைந்தது; பெரு மூச்சும் நீண்டது.

''காந்தி! இனி ரூபகுமார் வரமாட்டார் என்று நினைத்தோமல்லவா? அத்தைக்குப் பதில் நம் அப்பாவே இப்போது கிளம்பியிருக்கிறார். அவரை வரச் சொல்லி ஃபோன் செய்திருக்கிறார்.''

''அப்படியா? ஒன்றுக்கொன்று ஏடா கூடமாக முடியக் கூடாது என்றால் வாசுவை மணந்து கொள்வதில் இனியும் நீ தாமதம் காட்டக் கூடாது!''

ரமாவின் முகம் வெட்கத்தினால் சிவந்தது. ''நானா தாமதிக்கிறேன்?'' என்ற ரமாவின் முகத்தில் ஒரு நிமிடம் சோகம் பரவியது. ''அம்மா இல்லாத குறை இப்பொழுதுதான் பெரிதாகத் தெரிகிறது. நானே அப்பாவிடம் போய் எனக்குக் கல்யாணம் செய்து வையுங்கள் என்று எப்படிக் கூறுவது?'' என்றாள்.

காந்தி ஒரு முறை ரமாவை நோக்கினாள். ''நானே உனக்கு அம்மாவாக இருந்து அப்பாவிடம் கூறுகிறேன்!''

ரமா கண்ணீர்ப் பெருக்குடன் சகோதரியை அணைத்துக் கொண்டாள்.

''இப்படி ஒரு சகோதரி கிடைக்க என்ன பாக்கியம் செய்தேனோ?''

காந்தியின் உள்ளமோ தவிப்பின் கரையைத் தொட்டிருந்தது. சுலபமாகச் சகோதரியிடம் சொல்லிவிட்டாள். ஆனால் சொந்தமாக்க வேண்டிய பொருளைத் தானப் பொருளாக்குவதென்றால் சட்டென்று மனம் ஒப்புமா? தன்னை மறைத்துக் கொள்ள அங்கிருந்து எழுந்து செல்ல முனைந்தாள். ஆனால் ரமா அவள் கையைப் பிடித்து அமர்த்தி, ''நீ எனக்காக இவ்வளவெல்லாம் செய்கிறாயே, உனக்கு நான் என்ன உதவி செய்வது?'' என்றாள்.

''நீ என்ன சொல்கிறாய், ரமா?''

''எத்தனை முறை நான் உன்னைக் கேட்டு விட்டேன்? நீ இன்னும் சொல்லவில்லையே!''

''எதை?''

''புரிந்தும் புரியாததுபோல் பேசுகிறாயே, காந்தி! உன்னைப்போல் ஒளித்து மறைக்க எனக்கு வரவில்லையே!''

''சுற்றி வளைத்து என்ன பேச்சு? சொல்ல விரும்புவதை நேராகச் சொல்லேன்!''

''நீ அன்று ஒரு புகைப்படத்துடன் உட்கார்ந்திருந்த நிலையைப் பார்த்தே புரிந்து கொண்டேன். காதலிப்பதில் ஒரு தவறுமில்லை. அப்படியிருக்கும் போது உன் உள்ளம் கவர்ந்தவனைப் பற்றி ஏன் என்னிடம் மறைக்கிறாய்? அதுதான் எனக்கு விளங்கவில்லை!'' என்றாள் ரமா.

காந்தி தலை குனிந்து அமர்ந்திருந்தாள். 'அவள் மறைக்காமல் இருந்தால்...' எப்படி எப்படியோ சிந்தனை ஓடியது.

''என்ன காந்தி, நான் சொல்வது காதில் விழுகிறதா?''

'சொல்லி விடட்டுமா? காட்டி விடட்டுமா?' — உணர்ச்சிக் கொந்தளிப்போடு காந்தி எழுந்து உள்ளே சென்றாள். மனச் சுழலின் வேகத்தில் 'எதற்காகப் பயப்படவேண்டும்?' என்று ஒரு கேள்விக் குரல் வேறு பிறந்தது. ஆனால் பெட்டியின் அருகில் சென்றதும் சட்டென்று நின்று விட்டாள்.

'இந்த நெஞ்சுக்கு இன்று என்ன கேடு வந்துவிட்டது? நல்ல முறையில் சதுரங்கக் காய்களை நகர்த்தி வந்தவளுக்கு இன்று ஏன் இப்படிக் குயுக்தி தோன்றுகிறது?'

அவள் குயுக்தியா செய்கிறாள்? அவளும் வாசுவைக் காதலிப்பதில் தவறில்லையே! பிரமன் படைப்பில் வாசுவைக் காதலிக்க ரமாவுக்கு எவ்வளவு பங்கு உண்டோ, அவ்வளவு அவளுக்கும் உண்டுதானே?

ஆனால் காந்தி பழைய காந்தியாகத்தான் திரும்பினாள். தன் காதலைப் பற்றிக் கூறிச் சகோதரியின் மனத்தைத் துயரில் ஆழ்த்தக் கூடாது என்ற முடிவே மேலோங்கி நின்றது. (தொடரும்)

# ரகுபதி ராகவ

மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி



## 17 - (II)

இதில் பிரமை ஒன்றுமில்லை. என்னை நான் ஏமாற்றிக் கொள்ளவில்லை. அனைவரும் செய்து பார்த்துச் சோதித்துக் கொள்ளும்படியான உண்மை. மனம் இணங்க வேண்டும். பொறுமை வேண்டும். இதற்கு வேண்டிய அதிகாரத்தை, தகுதியை அடைவதற்கு உறுதியான எண்ணமும், சாந்தமும், பொறுமையும் வேண்டும். அதுவும் கஷ்டமல்ல. ஆனால் உண்மை வேட்கை வேண்டும். தாகத்துக்குத் தண்ணீர் விரும்புவது போல் விரும்ப வேண்டும். வேறொருவரை நீங்கள் நம்ப வேண்டியதில்லை. உங்களை நீங்கள் நம்பினால் போதும். உங்களுடைய அந்தராத்மா பேசுவதற்கு நீங்கள் காது கொடுக்க வேண்டும். அந்தராத்மா என்கிற பேச்சை விரும்பாவிடில் உங்களுடைய பகுத்தறிவு என்றே வைத்துக்கொள்ளுங்கள். உங்கள் அறிவு உங்களுக்கு என்ன சொல்லுகிறதோ, அதைக் கேளுங்கள். கடவுளை வேண்டாதவர்கள் கடவுள் என்கிற பெயரை விட்டுவிடலாம். ஆனால் அதற்குப் பதில் வேறொரு சொல்லைத் தேடியே தீரவேண்டும். முடிவில் அந்தச் சொல்லும் கடவுளாகவே முடிந்து தீரும். பிரபஞ்சத்தில் கடவுளைத் தவிர வேறொன்றில்லை என்பதினால் அல்லவோ இப்படி முடியும்!

இன்னும் ஒப்புக் கொள்ளுகிறேன் : தம் அந்தராத்மா இப்படிச் சொல்லுகிறது என்று பலர் வேஷம் போடலாம். வேஷம் போடுகிறவன் ஒவ்வொருவனும் அந்தராத்மாவைக் கண்டு பேசியவன் அல்ல என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். சிலர் வேஷதாரிகளாக இருக்கலாம். அல்லது தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொண்டு மோசமும் போயிருக்கலாம். எதற்குமே முயற்சியும் பயிற்சியும் வேண்டும். பலர் முயன்று சிலரே வெற்றி பெறுவார்கள். அப்படி வெற்றி பெற்ற சிலரை நாம் அடைவதற்கு, வெற்றி பெறாதவர் பலரைப் பொறுத்துத்தான் வரவேண்டும்.

பொய்யன் ஒருவன் ''எனக்கு ஆண்டவன் சொன்னான்'' அல்லது ''என் அந்தராத்மாவின் உத்தரவு இது'' என்று மக்களை மோசம் செய்தால் தப்பிப் போக மாட்டான். ராஜாவின் உத்தரவின்றி ராஜாவின் பெயரைச் சொல்லி ஏமாற்றினவன் என்ன பாடு படுவானோ அதற்கும் மேல் அந்தராத்மாவின் பெயரைச் சொல்லி மோசம் செய்தவன் படுவான். சந்தேகமில்லை. அவன் அடையும் தண்டனை பெருந் தண்டனையாகும்.

சாதாரண மோசக்காரர்கள் அடையும் தண்டனை உடலைப் பொறுத்தது. இந்த மோசக்காரன் அடையும் தண்டனை சர்வ நாசமாகும். கதியற்ற நிலை அடைவான்.

என்னைப் பற்றிக் குற்றம் சொல்லுகிறவர்கள் என்னிடம் அவர்கள் வைத்திருக்கும் அன்பினால், என்னை மோசக்காரன் என்று சொல்லவில்லை. பிரமை என்று சொல்லுவார்கள். என்னைப் பொறுத்த மட்டில் இரண்டும் ஒன்றே. வெறும் பிரமையாக இருந்து அதைப் பின்பற்றி நடந்தேனானால் அது மோசமே ஆகும். அடக்கத்துடனும் பயத்துடனும் மிக ஜாக்கிரதையாக ஒருவன் நடந்து கொள்ள வேண்டும், ஆண்டவனுடைய அருளைப் பெறுவதற்கு. அகங்காரத்திலும் பிரமையிலும் சிக்கிக் கொள்ளாமல் அவனுடைய அருளைப் பெற்று அவனுடைய குரலைக் கேட்கும் தகைமை பெற வேண்டுமானால் ஒருவன் தன்னை முழு சூன்யமாக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு மேல் நான் என்ன சொல்வேன்!

(பம்பாய் கிரானிகிள் 18-11-33)

பாதுகாப்பிற்கு
ஒரு பூட்டு உள்ள
தெனில் அது
நவ-தால் ஒன்றே
ஒன்றுதான் !




# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால்
தான் பாங்குகளும் தொழிற்
சாலைகளும், கிடங்குகளும்
நவ-தால் பூட்டையே உபயோ
கிக்கின்றனர். அதிநுட்பமான
தயாரிப்பு! ஒவ்வொரு
பூட்டுக்கும் மாறுபட்ட
இணைப்புமுறையில் வெட்டப்
பட்ட சாவிகள். உடைத்துத்
திறக்க இயலாதபடி அதிக

பாதுகாப்பு அளிப்பதற்
கேற்ற முறையில் செய்யப்
பட்டது நவ-தால். பித்தளை,
எஃகினாலான இரட்டைக்கூடு
அதை மிகமிக உறுதியாக்கு
கிறது. தயாரிப்பவர்கள்:
கோத்ரெஜ்-பாதுகாப்பு
உபகரணங்களைத் தயாரிப்ப
தில் 70 ஆண்டுகளுக்கும்
மேலான அனுபவமுடைய
வர்கள்.

4 சைஸ்கள்:
40 mm (5 லீவர்கள்)
50 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ் எப்போதும் நங்கூரம் மார்க் பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

## அத்தியாயம் 25

# காந்தீயம் தோற்றதா?

நீண்ட வராந்தாவில் ஒரு சாய்வு நாற்காலியில் சற்று ஓய்வாக அமர்ந்திருந்த சாருலதா, எதிரே இருந்த உயரக் குறைவான ஸ்டூலில் கால்களை நீட்டிக் கொண்டிருந்தாள். அவள் கன்னத்தில் ஒரு கட்டை விரலும் நெற்றியில் மற்ற நான்கு விரல்களும் பதிந்திருந்தன. கண்கள் மூடியிருக்க அமைதியாகச் சுவாசித்துக் கொண்டிருந்தாள். அவள் நெஞ்சில் ஒரு பத்திரிகை கவிழ்ந்த வாக்கில் கிடந்தது.

வராந்தாவின் ஒரு மூலையில் நிழலில் தழைக்கும் இரு செடிகள் தொட்டிகளில் வைக்கப்பட்டிருந்தன. அலமாண்டா கொடி யொன்று அதே ஓரத்தில் வெளிப்புறம் படர விடப்பட்டு அழுத்தமான மஞ்சள் நிறத்தில் பெரிய பெரிய பூக்களை வாரி வழங்கிக் கொண்டிருந்தது.

காரை நிறுத்தி விட்டுப் படியேறி வந்த வேணுகோபால், சாருலதா அப்போது இருந்த நிலையில் அளித்த அழகுத் தோற்றத்தைச் சில விநாடிகள் ரசித்துக் கொண்டு நின்றான். சாதாரணமாக எப்போதுமே சாருலதாவைச் சரிசமானமாகக் கருதிப் பழகியிருந்த வேணுகோபாலுக்கு இன்று அவள் பௌதிக ரீதியில்தான் என்றாலும் தாழ்வான ஒரு நாற்காலியில் இருந்ததும் அவள் அருகே தான் உயர்ந்து நின்றதும் ஏதோ இனம் புரியாத ஒரு கிளுகிளுப்பை ஏற்படுத்தியது. உரியவர் வந்து அள்ளிக்கொண்டு போகக் காத்திருக்கும் ஒரு பூமாலையாக அவள் படுத்துக் கிடந்தாள்.

அவளுக்கு உடம்பு சரியில்லாதபோது தயங்காமல், யோசியாமல் அவளைத் தொட்டுச் சிகிச்சை செய்த வேணுகோபாலுக்கு இப்போது அருகில் நின்று அவளைப் பார்வையால் தழுவவே தயக்கமாக இருந்தது. அவள் அழகை அளவெடுப்பதை நிறுத்திப் பேச்சில் கவனத்தைத் திருப்பினான்.

"பகல் தூக்கமா?" என்று கேட்டான்.

"இல்லை, தீவிர யோசனை" என்றாள் சாரு, கண்களைத் திறவாமலே. கண்டு விரல் நெற்றியின் மையத்தில் தாளம் போட ஆரம்பித்தது.

"எதைப் பற்றியோ?"

"எல்லாம் உங்களைப் பற்றித்தான்."

"ஆகா அடியேன் தன்யனானேன்!"

"என்ன யோசித்துக் கொண்டிருந்தேன் என்று தெரிந்தால் அப்படிச் சொல்ல மாட்டீர்கள்."

"நல்லதோ, கெட்டதோ எதுவானாலும் சரி; என்னைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தாயல்லவா, அதுவே போதும்."

சாருலதாவின் இமைகள் படபடத்தன. அவள் நிமிர்ந்து உட்கார்ந்து தன் கரிய விழிகளை அவன்மீது செலுத்தினாள். குற்றம் சாட்டுவது போல் கட்டியபடியே, "நீங்கள் செய்த காரியம் உங்களுக்கே நன்றாக இருக்கிறதா?" என்று கேட்டாள்.

"நீ எப்போது இதைக் கேட்கப் போகிறாய் என்றுதான் நான் பயந்து கொண்டேயிருந்தேன்."



சாருலதா

கி.ராஜேந்திரன்

"இவ்வளவுதான் உங்கள் பதிலா?"

"வேறு பதில் என்னிடம் இல்லையே!" என்றான் வேணுகோபால் பரிதாபமாக. சாருலதாவிடம் கோபமாகப் பேச வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டு வந்தவன், இப்போது சாருலதாவின் கேள்விக் கணைகளிலிருந்து தன்னைத் தானே காத்துக் கொள்ள வேண்டிய நிலையில் இருந்தான். இதை நினைத்து அவனுக்குச் சிரிப்பு வந்தது.



''என்ன சிரிக்கிறீர்கள்? அலட்சியமாயிருக்கிறதா உங்களுக்கு? சாரங்கனை என்னை பிளாக்மெயில் செய்வது போல் நடிக்கச் சொன்னீர்கள்; கூசாமல் பொய் பேசத் தூண்டினீர்கள்; அவமரியாதையாகத் தொட்டுப் பேசத் தைரியத்தை அளித்தீர்கள்; நான் தற்கொலை செய்து கொள்ளுமளவுக்கு என்னை வதைக்கச் செய்தீர்கள். குண்டு என்மீது குறி பிசகாமல் பாய்ந்திருந்தால்...? ஒரு கண நேரத் தாமதம் என் உயிரைக் குடித்திருக்குமே?''

''அப்படி ஏதாவது நேர்ந்திருந்தால் எனக்கு மன்னிப்பு ஏது? உன்னைப் பின்தொடர்ந்து நானும் வரவேண்டியதுதான்.''

''எதற்கு இப்படி ஒரு பயங்கரமான பரிசோதனை?''

''உனக்கு அதிர்ச்சி வைத்தியம் செய்வது நல்லது என்று எனக்குப் பட்டது. நீ சொல்வதற்கெல்லாம் தலையாட்டிக் கொண்டிருக்கும் சாரங்கனை உனக்கு விரோதமானவனுக்கி விட்டால் பிறகு உனக்கு என்னைத் தவிர வேறு யாரு மில்லை என்று ஏற்பட்டு விடும். உன் மனத்தில் நீ மூடி மறைத்துக் குமைந்து கொண்டிருக்கும் விஷயங்களை என்னிடம் சொல்லி ஆறுதல் பெற நினைப்பாய். பிறகு நாம் இருவருமாகச் சேர்ந்து யோசிக்கலாம். உன் உள்ளத்தைக் குடையும் நினைவுகளாலும் உன்னை பிளாக்மெயில் செய்யும் கயவர்களாலும் நீ துன்பமடைவதற்கு ஒரு முடிவு காணலாம். இப்படியெல்லாம் எண்ணித்தான் இந்தக் காரியத்தில் இறங்கினேன்.''

''டாக்டர்கள் கையாளும் முறையா இது?''

''இல்லை, உன் வழியிலேயே சென்று உன்னை வளைத்துப்போட நினைத்தேன்.''

''உங்கள் நடத்தையைப் பற்றி மெடிக்கல் கவுன்ஸிலுக்கு நான் எழுதினல், என்ன ஆகும்?''

''ஒரு டாக்டருக்குரிய பண்புகளை மறந்து நான் வரம்பு மீறி நடந்து



கொண்டதாகக் கண்டனத் தீர்மானம் நிறைவேற்றுவார்கள்.''

''அவமானமில்லையா அது?''

''அதை விட நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம்!''

''அப்படிப்பட்ட காரியத்தை ஏன் செய்தீர்கள்?''

''இதுகூடத் தெரியவில்லையா உனக்கு? நான் டாக்டராக அப்போது இயங்கவில்லை. உன்னை அடையத் துடிக்கும் காதலனாக இருந்தேன். உன் உடலும் உள்ளமும் என்னிடம் தஞ்சமடைந்து விட வேண்டும் என்று ஆசைப்பட்டேன்.''

''நான் பிளாக்மெய்ல் செய்யப்படுகிறேன் என்று யார் சொன்னது உங்களுக்கு?''

''சாரங்கன் சொன்னான். நீயும்தான் கூறினாய், அரை மயக்க நிலையில். உனது இளம் பிராய நினைவுகள் மட்டுமில்லை; குணுவுக்குக் கல்யாணம் நடக்காதது. அவன் வீட்டை விட்டுப் போனது, மணியின் மரணம், வேலைச் சுமை, நீ பிளாக்மெய்ல் செய்யப்பட்டது. உருப்படாத கம்பெனி ஒன்றை உன் வசமாக்கிக் கொண்டது — எல்லாமாகச் சேர்ந்து உன்னை ரொம்பவும் சங்கடப் படுத்திக் கொண்டிருந்தன. இவற்றையெல்லாம் மனம் விட்டு என்னிடம் பேச உனக்குச் சந்தர்ப்பம் ஏற்படுத்தித் தராவிட்டால் உனக்குப் பைத்தியமே பிடித்திருக்கும்.''

''எனக்குப் பைத்தியம் பிடிக்காமலிருக்க என்னைப் பைத்தியமாக அடித்திருக்கிறீர்கள்!''

''நான் வலிய உன் உதவிக்கு வந்திருந்தால் நீ சுருண்டு கொண்டிருப்பாய். அதனால் என் உதவியை நீ நாடும் நிலைக்கு உன்னைக் கொண்டு வந்தேன்.''

''பயங்கரமான சதித் திட்டம்!''

''நீ கோபப்படுவது நியாயம்தான்.''

''கோபமா? நான் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்றாள் சாருலதா. புன்னகை அரும்பிச் சிரிப்பாக வெடித்தது அவள் ரோஜா இதழ்களில். ''எதற்கு என்று சொல்லுங்கள் பார்க்கலாம்!''

புதிரை விடுவிக்கத் தெரியாமல் தலையசைத்தான் வேணுகோபால்.

''காந்தியம், காந்தியம் என்று அடிக்கடி எனக்கு லெக்சர் அடிப்பீர்களே! காந்திஜி உங்கள் செயல்களை அங்கீகரிப்பாரா? காந்தியம் தோல்வி அடைந்துவிட்டதாகத்தானே அர்த்தம்? அதை நீங்கள் இப்போது ஒப்புக் கொண்டுதானே ஆக வேண்டும்?''

வேணுகோபால் தடுமாறினான். அதுவரை நின்றபடியே பேசிக் கொண்டிருந்தவனுக்கு இப்போது அமர ஆசனம் தேவைப்பட்டது. சாருவின் பாதங்கள் இதுவரை நீண்டிருந்த ஸ்டூலில் அவன் உட்கார்ந்து கொண்

டான். அதே கணத்தில் பௌதிக ரீதியில் மட்டுமின்றி மனப் போக்கிலும் கூட அவள் திடுதிப்பென்று உயர்ந்து விட்டது போலவும் தான் தாழ்ந்து போய்விட்டது போலவும் அவனுக்குத் தோன்றியது.

அவன் தவிப்பைப் புரிந்து கொண்டு அவள் மேலும் நையாண்டியாக நகைத்தாள். ''காந்தீயக் காவலரே! ஏன் மௌனம்?''

வேணுகோபால் சற்று நேரத்துக்குப் பின் பேசும் துணிவு பெற்றான். ''சாரு, காந்தீயத்தைக் கடைப்பிடிக்க முயன்ற வேணுகோபாலுக்குப் படுதோல்வி என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் காந்தீயத்துக்குத் தோல்வி என்பதை நான் ஒருநாளும் ஒப்புக் கொள்ளவே மாட்டேன்.''

''இரண்டும் ஒன்றுதான்!''

''அதெப்படி? காந்தி இன்று நம்மிடையே வாழவில்லை; ஆனால் காந்தீயம் என்றும் வாழும்.''

''ஸஹாரா பாலைவனத்தில்தான் அது வாழ முடியும்! பணப் பசியில் கொடிய புலியைப் போன்றவர்களும், குயுக்தியில் நரிகளைப் போன்றவர்களும் வாழும் நாட்டில் காந்தீயத்துக்கு இடமில்லை, வேணு!'' என்றாள் சாருலதா.

## அத்தியாயம் 26

# வாழ்க்கை ஒப்பந்தம்

ஐலண்டு மைதானத்துக்கு அருகே மரங்களிலெல்லாம் வண்ண விளக்குகள் சரம் சரமாகப் படர்ந்திருக்க, அப்பால் தாஜ்மகாலின் மாதிரித் தோற்றம் மின் விளக்கொளியில் ஜொலிக்க, ஏதோ சொப்பனபுரிக்கு வந்துவிட்டது போல் தோற்றமளித்தது சென்னையின் அந்தப் பகுதி.

''நாளை முதல் நீ ஆபீஸுக்குப் போகலாம், சாரு. அப்புறம் உனக்கு இதற்கெல்லாம் நேரம் இருக்காது. அதனால்தான் இன்றைக்கே இதைப் பார்க்க உன்னை அழைத்து வந்தேன்'' என்றான் வேணுகோபால். காரை மெதுவாக ஓட்டி வந்து சாலை ஓரமாக நிறுத்தினான்.

''டூரிஸ்ட் எக்ஸிபிஷனா? அட்டை தாஜ்மஹாலும் மூங்கில் ஐஃபெல் டவரும் அமர்க்களப்படுகிறதே!''

''வெளியே இருந்து பார்க்க அழகாக இருக்கிறது. உள்ளே விசேஷமாக ஏதுமில்லை என்கிறார்கள்.''

''எல்லாமே அப்படித்தான். வெளித் தோற்றம் வேறு, மனத்துக்குள் இருப்பது வேறு! பேச்சு வேறு, செயல் வேறு!''

''காந்தீயத்தைப் பற்றி அடிக்கடி உனக்கு உபதேசம் செய்து விட்டு நான் அந்தப் பாதையில் நடக்கவில்லை என்றுதானே மறுபடியும் குத்திக் காட்டுகிறாய்?''

''நான் பொதுப்படையாகச் சொன்னேன். உங்களுக்கு நெஞ்சம் குறுகுறுக்கிறது'' என்று கூறிச் சிரித்தாள் சாருலதா. ''உங்கள் பேரில் தப்பில்லை; சகவாச தோஷம். என்னுடன் பழகினால் அப்புறம் நல்லவராகவே நீடிக்க முடியுமா நீங்கள்? பொய், பித்தலாட்டம் எல்லாம் அத்துபடியாகி விடாதா?''

''சாரு! ஒரு விஷயத்தை நீ மறந்து விட்டுப் பேசுகிறாய். நான் என்னுடைய நற்பெயருக்கு ஏற்படக் கூடிய களங்கத்தைக்கூடப் பொருட்படுத்தாமல் அப்படி நடந்து கொண்டது எதனால்? மெடிக்கல் கவுன்ஸிலில் 'அன்புரொபஷனல் காண்டக்ட்' என்று சொல்லி என்னைக் கண்டனம் செய்தார்களென்றால் என் மானம் கப்பலேறி விடாதா? அதற்கெல்லாம் நான் துணிந்தது உன் மீதுள்ள அசைக்க முடியாத காதலால்தான் என்பது புரியவில்லையா?''

''என் கதையையெல்லாம் கேட்ட பிறகு அந்தக் காதல் கரைந்து போயிருக்க வேண்டுமே!''

''இல்லை, சாரு. உன் கதையை, சிறுமியாக இருந்தபோது உனக்கு நேர்ந்த துன்பங்களைத் தெரிந்து கொண்டபிறகு என் காதல் மேலும் கெட்டிப்பட்டிருக்கிறது. வேண்டுமானால் அதோ அந்தத் தாஜ்மஹால் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்.''

இந்தச் சமயத்தில் ஒரு போலீஸ்காரர் அருகில் வந்தார். ''ஸார்! இங்கே வண்டியை நிறுத்தக் கூடாது. எக்ஸிபிஷனுக்குப் போகணும்னா 'கார் பார்க்'கில் வண்டியை நிறுத்திவிட்டு வாங்க. இல்லேன்னா போய்க்கிட்டே இருங்க.''

வேணுகோபால் காரைக் கிளப்பி மன்ரோ சிலையை வலம் வந்து பிறகு பீச் சாலையோடு செலுத்தினான். ''சமய சந்தர்ப்பம் தெரியாமல் இந்தப் போலீஸ்காரன் வேறு இடைஞ்சலாக வந்து சேர்ந்தான் பார்!''

''நான் அவனை வாழ்த்திக் கொண்டிருக்கிறேன். போயும் போயும் அந்த அட்டை தாஜ்மகால் மீது ஆணையிட்டுச் சொல்ல நினைத்தீர்களே! உங்கள் காத

ளுக்கும் அவ்வளவு மதிப்புத்தானே கொடுக்க முடியும்?'' சாரு சிரித்தாள்.

''வேண்டாம் சாரு! இந்த அட்டை தாஜ்மஹால் வேண்டவே வேண்டாம். நிஜ தாஜ்மஹாலுக்குப் போவோம். அப்புறம் தில்லிக்குச் சென்று அங்கிருந்து விமானம் மூலம் அயல் நாடுகளுக்குப் பறப்போம். நான் மருத்துவத் துறையில் ஆராய்ச்சி செய்யப் போகிறேன். நீ வியாபார நிமித்தமாக என்னுடன் வந்து சேர்ந்து கொள். இருவருமாக உலகச் சுற்றுப் பயணம் செய்வோம். காதலர்களுக்கு உகந்தது என்று கருதப்படுகின்ற இடங்கள் ஒன்றுவிடாமல் பார்ப்போம். அப்படி நாம் பார்க்கும் ஒவ்வொரு காட்சி எதிரேயும் நான் சத்தியம் செய்கிறேன். உன்னை மனமாரக் காதலிப்பதாக. ஐஃபெல் டவர் எதிரேயும் ட்ரபால்கர் சதுக்கத்தின் மத்தியிலும் ஸ்விஸ் ஆல்ப்ஸின் பனி படர்ந்த மலைச் சரிவுகளிலும் எகிப்திய ஸ்பிங்க்ஸுக்கு எதிரேயும் டிஸ்னி லாண்டின் அற்புதங்களுக்கு இடையேயும் எம்பயர் ஸ்டேட் பில்டிங்கின் உச்சியிலும் ஹவாய் கடற்கரையின் அழகில் அமிழ்ந்திருக்கும்போதும் உன் கைகளைப் பற்றியபடி ஆணை இடுகிறேன்!''

''அவற்றையெல்லாம் பார்க்க விமானம் ஏறிப் போக வேண்டும். ஆனால் நயாக்ரா நீர்வீழ்ச்சி மட்டும் இங்கேயே வந்து விட்டது—உங்கள் பேச்சாக மாறிக் கொட்டுகிறது.'' சாருலதா பெரிதாகச் சிரித்தாள்.

''வெறும் வார்த்தைகள் இல்லை சாரு! உணர்ச்சி வெள்ளம்! அது உனக்குப் புரியவில்லை; புரியவேயில்லை!'' அவன் ஆத்திரமடைந்து காரின் முன்புறம் 'டாஷ்போர்ட்'டில் பல முறை இடக் கரத்தால் குத்தினான்.

அவன் கோபம் சாருலதாவை மருளச் செய்தது. விளையாட்டுப் பேச்சை அவள் தொடராமல் தடுத்தது. சில விநாடிகளுக்குப் பிறகு அவள் சொன்னாள்: ''வேணு! உங்களை நம்பத்தான் நான் முயலுகிறேன். ஆனால்...ஆனால்...''

''ஆனால் என்ன சாரு? என்ன சந்தேகம் உனக்கு?''

''திருமணம் என்று நடந்து விட்டால் கொஞ்ச காலத்துக்குப் பிறகு உங்கள் குழந்தையைக் கையிலெடுத்துக் கொஞ்ச வேண்டும் என்ற நியாயமான ஆசை உங்களுக்கு ஏற்படுமே!''

சாலை ஓரமாக வண்டியை நிறுத்தினான் வேணுகோபால். ''சாரு! உன்னிடம் நான் பொய் சொல்ல விரும்பவில்லை. எனக்குக் குழந்தைகள் ஒன்றல்ல, இரண்டல்ல; நாலைந்து குழந்தைகள் வேண்டும் என்ற ஆசைதான். ஆனால் சாரு, சத்தியமாகச் சொல்கிறேன்: நீயே குழந்தை வேண்டும் என்று ஏங்கும்வரை நான் என் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள நினைக்க மாட்டேன். சரிதானா?''

''என்றைக்குமே — வாழ்நாள் முழுவதுமே நான் பிள்ளைப் பேற்றை விரும்பா விட்டால்?''

''பிரசவம் பற்றி உனக்கு இருக்கும் பயம் அர்த்தமற்றது. இதை நீ போகப் போக நிச்சயம் உணர்ந்து கொள்வாய்.''

''ஒருவேளை உணர்ந்து கொள்ளாவிட்டால்....?''

''நானும் குழந்தைகள் வேண்டும் என்ற என் ஆசையை அடியோடு தியாகம் செய்து விடுகிறேன்.''

''அத்தனை பெரிய தியாகத்தை எதற்காக நீங்கள் செய்ய வேண்டும்?''

''உன்னிடம் எனக்குள்ள காதலுக்காகத்தான்.''

''காதலுக்காக ஒருவர் இவ்வளவு பெரிய தியாகத்தைச் செய்ய முடியும் என்று என்னால் நம்ப முடியவில்லை.''

''நீ என்றைக்குத்தான் என்னை நம்பியிருக்கிறாய், சாரு?'' என்று இரைந்தான் வேணுகோபால். ''கணக்குப் பார்த்துப் பார்த்து உன் மனம் கல்லாகி விட்டது. பணத்தை எண்ணி எண்ணி உன் மனத்தில் மனித உணர்ச்சிகளுக்கே இடமில்லாமல் செய்து கொண்டு விட்டாய். ஸ்டாம்ப் பேப்பரில் எழுதித் தருகிறேன், உன்னைக் காதலிக்கிறேன் என்று. வர்த்தக ரீதியில் ஒப்பந்தப் பத்திரம் எழுதிக் கையெழுத்துப் போட்டுத் தந்தால் அப்போதாவது நம்புவாயா? இன்னின்ன ஷரத்துக்களின் அடிப்படையில் நம்முடைய வாழ்க்கை ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது என்று வியக்தமாக எழுதிப் பத்திரத்தை ரிஜிஸ்தர் செய்து விடலாமா?''

இப்படிக் கேட்டுவிட்டு வேணுகோபால் காரைக் கிளப்பிக்கொண்டு கோபத்தில் வேகமாக ஓட்டிச் சென்றான்.

சாருலதாவிடமிருந்து விசும்பல் ஒலி கேட்டது.

''எதற்கு அழுகிறாய்? பயப்படாதே! காரை மோதிவிட மாட்டேன்; உன்னைப் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்த்து விடுகிறேன், வீட்டில்!''

''நான் அதற்காக அழவில்லை வேணு; உங்களுக்கு இத்தனை துன்பத்தைத் தர வேண்டிய நிலையில் இந்தப் பாவி இருக்கிறேனே என்றுதான் அழுகிறேன்.''

''அழு! அழு! உனக்கு அது நல்லது தான்'' என்றான் வேணு இரக்கமற்றவனாக. வீடு நெருங்கிக்கொண்டிருந்தது.

''வேணு!'' அவன் இடக் கரம் மீது தன் விரல்களைப் பதித்தாள் அவள். ''கொஞ்சம் நிறுத்துங்கள். அழுது வடியும் முகத்துடன் என்னை வீட்டில் யாரும் பார்க்க வேண்டாம்.''

கார் நின்றதும் அவள் விளக்கைப் போட்டுத் தன் முக ஒப்பனையில் கவனம் செலுத்தினாள். பவுடர் பஃப்பை நாசூக்காகப் பயன்படுத்தியவள் கூறினாள்: ''இந்த அளவுக்கு என்மீது காதலை நீங்கள் வளர்த்துக் கொண்டது பிசகு. இனியும் உங்களிடம் உண்மையை மறைத்தால் அது பாவமாகும்.''

''கதையில் பாக்கி இருக்கிறது என்பது எனக்குத் தெரியும்'' என்றான் வேணுகோபால் அமைதியாக. ''நீ பிளாக்மெய்ல் செய்யப்படுவது ஏன் என்பதை இன்னமும் நீ எனக்குச் சொல்லவில்லையே?''

''சொல்கிறேன். இவ்வளவு தூரம் என் கதையைத் தெரிந்து கொண்ட பிறகு பாக்கியையும் நீங்கள் அறிந்து கொள்வதால் என்னவாகிவிடப் போகிறது? ஆனால் யாரிடமும் இது பற்றி மூச்சு விடக் கூடாது நீங்கள். சத்தியம் செய்யுங்கள்.''

''அதற்கு அவசியமே இல்லை. நோயாளி கூறும் எதையுமே பரம ரகசியமாகப் பாதுகாக்க வேண்டியது ஒரு டாக்டரின் புனிதக் கடமை.''

சாருலதா சிரித்தாள். ''இப்படி நீங்கள் சொன்னதாகவும் மெடிக்கல் கவுன்சிலுக்கு எழுத வேண்டியது தான்!''

சுருக்கென்று தைத்தது வேணுகோபாலுக்கு. ''எழுது, சாரு! அவசியம் எழுது! என் நற்பெயரைக் காப்பாற்றிக் கொள்ள அங்கே யாருக்கும் லஞ்சம் கொடுக்க முடியாது; மதுவை வழங்கியாரையும்மயக்கவும்முடியாது!''

அவன் குத்திக் காட்டியதை அவள் ஒதுக்கிவிட்டுக் கூறினாள்: ''காதல் என்ற சொல்லே எனக்கு 'அலர்ஜி'யாக விளங்குவது ஏனென்றும் பிரசவம் என்ற நினைப்பே எனக்குப் பயத்தை உண்டு பண்ணுவது ஏனென்றும் தெரிந்து கொண்டீர்கள். இந்த இரு நிகழ்ச்சிகளின் பின் விளைவாக நேர்ந்த மூன்றாவது சம்பவத்தைச் சொல்கிறேன். ஆபீஸுக்கு விடுங்கள் காரை!''

''ஆபீசுக்கா? இந்த அகால நேரத்திலா?''

''ஆமாம், இப்போதேதான்'' என்றாள் சாருலதா.

* * *

ஏஜமானி அம்மாளைக் கண்டதும் மரியாதையுடன் சல்யூட் அடித்துப் பரபரப்புடன் கேட்டையும் சாருலதா பில்டிங்கின் வாசல் கதவையும் திறந்துவிட்டான் கூர்க்கா. இரவு எட்டு மணிக்கு மேல் அவள் ஆபீசுக்கு வந்தது அவனுக்கு வியப்பாக இருந்தது. வேணுவும் அவளுமாக லிஃப்டில் எட்டாவது மாடிக்குப் போன பிறகு அவன் எதையோ புரிந்து கொண்டு விட்டவன் போல், தனக்குத் தானே மெல்லச் சிரித்துக் கொண்டான்.

சாருலதா எண்டர்பிரைஸஸ் — சேர்மன்ஸ் ஆபீஸில் எல்லாக் கதவுகளையும் திறக்கக் கூடிய சாவி சாருலதாவிடம் இருந்தது. ஏதாவது ஓர் அவசரத்துக்குத் தேவைப்படும் என்பதால் இப்படி ஒரு 'மாஸ்டர் கீ' வைத்திருந்தாள் அவள்.

தன் காரியாலய அறையை அடைந்ததும் வேணுவைச் சோபாவில் உட்கார வைத்துவிட்டு, ''சற்று இருங்கள், இதோ வந்து விடுகிறேன்'' என்றாள். காரியாலய அறையை ஒட்டினாற்போல் அவளுடைய பிரத்தியேக 'டிரஸ்ஸிங் ரூம்' இருந்தது. அதற்குள் சென்றாள் அவள். பத்து நிமிஷங்களுக்குப் பிறகு அந்த அறைக் கதவு மீண்டும் திறந்தது. நிலைவாசல், சட்டம் போட்டது போல் சாருலதாவின் தோற்றத்தைத் தெற்றென எடுத்துக் காட்டியது. அந்தக் காட்சியைக் கண்டு திகைத்தான் வேணுகோபால்.

விதவைக் கோலத்தில் நின்றாள் அவள்!

**(தொடரும்)**

---

## வயது ஏறினால் உயரம் குறையுமா?

கிரிஸ்டோபருக்கு இப்பொழுது வயது பத்தொன்பது. உயரம் ஐந்தடி 8 அங்குலம். அவன் சென்ற ஆண்டு ஐந்தடி 9 அங்குலம் உயரம் இருந்தான். டாக்டர்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறது. லண்டன் போலீஸைச் சேர்ந்த இவருக்கு உயரம் குறைந்ததால் வேலை போய்விட்டது. போலீஸார் குறைந்த பட்சம் ஐந்தடி ஒன்பதங்குல உயரம் இருக்க வேண்டும் என்று விதி.

- டெய்லி மிரர்

---

கரி கூப்பர்
ஜான் வேன்
ஹம்ப்ரி போகார்ட்
ராபர்ட் டெய்லர்
} இந்த ஹாலிவுட் நடிகர்களின் பெயர்கள் இங்கு ஏன் இடம் பெற்றிருக்கின்றன?

இந்த நான்கு ஹாலிவுட் நடிகர்களும் புற்று நோயால் இறந்தவர்கள். இதில் ஜான் வேன் நாள் ஒன்றுக்கு நூறு சிகரெட் பிடிப்பார்.

- 'டிட்பிட்ஸ்' - 'பாபு'

# திரையில் கண்ட நிறைவு





ஸ்ரீப்ரியா



கதவை இழுத்துப் பூட்டினுள் லக்ஷ்மி. அடுத்து, அவள் அழைப்புக் கேட்குமுன், எதிரே வந்து நின்ருன் அந்தச் சிறுவன். "சினிமாவுக்கா மாமி.... சாவியை மாமாவிடம் கொடுக்க வேண்டுமா?" ஒரு கையில் பம்பரக் கயிற்றுடன், நழுவும் நிக்கரைப் பிடித்தபடி, மறு கையில் தெருப் புழுதியும் வியர்வையும் வழிய அவன் கை நீட்டி அவள் தந்த சாவியை வாங்கித் தன் நிக்கர் பாக்கெட்டில் திணித்துக் கொண்டான்.

நிம்மதியாகப் படி இறங்கினுள் அவள். அவளுக்குத் தெரியும் தன்னைச் சுற்றி மொய்க்கும் விழிகளின் குறும்பும், விஷமும்! ஆனால், அதை ஏன் அவள் லட்சியம் செய்ய வேண்டும்?

"சூரிய அஸ்தமனம் தப்பினுலும் இவள் சினிமா தப்பவில்லையே! அதிலும் அந்த 'சக்ரபதி ரூஷிகன்' நடிப்பென்ருல் இவளுக்கு உயிராம். அதற்காக, அவன் நடித்த படங்களுக்கே அவள் போகிருளாம்!" காமாட்சி, முன் போர்ஷன்காரி கெக்கலித்தாள்.

"ஆ...குடும்பப் பெண்ணுப் லட்சணமாய் இல்லாமல்...இது என்ன?" கப்பு தன் கன்னத்தைத் தோளில் இடித்து நொடித்தாள்.

"ஏன் மாமி, சினிமாவுக்குப் போனுல் தப்பா? குடும்பப் பெண்கள் சினிமா பார்க்கக் கூடாதா? அப்படி ஒரு சட்டம் வந்தால் சினிமா உலகமே அஸ்தமித்து விடுமே!...." வனஜா வேண்டுமென்றே உரத்துச் சிரித்தாள். எந்தச் சினிமா, எந்தக் குப்பையானுலும் இடுப்பில் ஒரு ரூபாயை முடிந்துகொண்டு போய் விடும் காமாட்சியிடம் அவளுக்கு என்றுமே 'காட்டம்'தான்.

ஆனுல் வனஜா பேச்சுக்கு அர்த்தம் தங்களைக் கண்டிப்பதைவிட இன்னும் ஒண்டி விடுவதுதான் என்பதும் கப்பு அறியாததல்ல.

"போகலாம், மாதம் ஒரு முறை. தப்பினல் இரண்டு முறை போகலாம். அட, நம்மைத்தான் யாரையாவது அவள் துணைக்குக் கூப்பிட்டாளா பாரேன்! சரியாகக் கதவைப் பூட்டிக் கொண்டு போகிறது! பாவம், அவர் மானி!"

"சாவியை வாங்கிக் கதவைத் திறந்து குனிந்த தலை நிமிரமாட்டாமல் அவர் உள்ளே நுழைவும் பரிதாபம்! வயிற்றெரிச்சல்.... அப்பாவி மனிதர். இப்படிக் கண்டிப்பு இல்லாதிருப்பாரா ஒரு புருஷன்!"

"இப்போது மட்டும் இவள் 'புருஷனோடு போகவில்லை என்பது என்ன நிச்சயம்?" வனஜாவின் நொடிப்பை அவர்கள் ஜீரணிக்குமுன்னுல் வாசல்புறம் நிழலாடியது. கயிறு சுற்றிப் பம்பரத்தை வலக் கையில் பிடித்தபடி அச்சிறுவன் இடக்கையால் சாவியை எடுத்துத் தர 'அவர்' கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார்.

பரம அக்கறையுடன் இருள் சூழ்ந்த வீட்டினுள் அவர் தனியாக நுழைவதை ரசித்து விட்டுப் பிரிந்தனர் அந்த மகாநாடு நடத்திய மூவரும்.

“சாப்பிட்டாயா? லட்சுமி....”

“ம்....ம்....”

“இப்போதுதானே வந்தாய்? அதற்குள்ளாகச் சாப்பிட்டாயிற்றா? இப்படித் தினம் இரவுப் பட்டினி கிடந்தால் உடம்பு என்னத்துக்காகும்? வா, சாப்பிடு அம்மா!”

ஒண்டுக் குடித்தனத்தில் சுவர்களுக்குக் கூடச் செவியுண்டோ!

“பார்த்தீர்களா? அடுத்த வீட்டு ஆண் பிள்ளையைப் பார்த்தீர்களா? அவர் அக்கறையாகக் கெஞ்சுவதைக் கேட்டேளா? நீங்களும் இருக்கிறீர்களே! அவள் இருக்கும் சவரணைக்கு, அரவணைப்பில் குறைச்சல் இல்லை! கொடுத்து வைத்தவள்....” வனஜா கணவன் முகத்தருகே முணகினாள்.

“ஸ், மெதுவாகப் பேசு, வனஜா. ஏன் அவளுக்கென்ன? எல்லோரையும் போல் தானிருக்கிறாள்....” ஒன்றும் புரியாதது போல் மணி கூறினான்.

“போதும்..... எல்லோரையும் போலவா? தினம் தப்பாமல் சினிமா என்ன? அவள் 'ஷோக்' என்ன? ஒரு நாள் அக்கா வீட்டுக்கு — அதுவும் உங்கள் அனுமதியுடன் — போய் விட்டுத் திரும்பும்போது பஸ் சரியாகக் கிடைக்காமல் நான் 'லேட்'டாக வந்ததற்கு என்ன உறுமு உறுமினீர்கள், நீங்கள்? அவள் தினம் அவர் வரும் நேரம் சினிமாவுக்குப் போய் விடுகிறாள். அவரும் இரவு வரும் அவளுக்கு உபசாரம் செய்கிறார். வெட்கம் கெட்ட ஆண் பிள்ளை!”

“அடடா! வனஜா... எவள் எப்படிப் போனால் உனக்கென்ன?” மணிக்கு எரிச்சலூட்டியது, இந்த அந்நிய வீட்டுப் பிரச்னைப் பேச்சு! “உனக்கு எத்தனையோ எங்கேஜ்மெண்ட்ஸ்? அவளுக்கு இது ஒன்றுதான் பொழுதுபோக்கு. அதற்கென்ன செய்வது?”

“க்கும், இன்னோர் ஆண் பிள்ளை அடிக்கும் கூத்தை. அவள் கொஞ்சிக் குலவிக் கட்டிப் புரள்வதைப் பார்த்தால் இவளுக்கு....”

“சீ! வாயை மூடு.... உளறுதே!”

“இல்லையன்று.... இவளுக்கு அந்த 'சத்ரபதி' நடிப்பிலே ஏன் அத்தனை மோகமாம்! நான் கண்டுபிடித்து விட்டேன்....”

“ஐயோ! வனஜா! ஒரு பெண்ணைப் பற்றி இன்னொரு பெண் இப்படிப் பேசுவது பாவம். சினிமாவை ஒருவர் பார்த்தால், அதில் ரசிக்கப் பல அம்சங்கள் இருக்கின்றன. கதை, பாட்டு, நடிப்பு, ஒளி — ஒலிப்பதிவு இத்தியாதி — அதற்காக ஆண்கள், சினிமாவுக்குப் போனால் அந்த நடிகைகளைப் பல்லிளித்துக் கொண்டு ரசிக்கத்தான் என்றும், பெண்கள் போனால் கதாநாயகனின் காதல் மோகாவேசத்தைக் காணத்தான் என்றும் சொல்லிவிட முடியுமா?”

“ஐயே.... நீங்கள் ஓர் அசடு!...” வனஜா தன் பேச்சை அவன் ரசிக்காத குறையுடன் திரும்பிப் படுத்தாள்.

'நல்ல காலம்! அடுத்த வீட்டுக்காரிக்கு நீங்கள் என்ன பரிந்து பேசுவது?' என்று குறுக்கே பாயாமல் இதோடு அவள் நிறுத்தினாளே என்ற நிம்மதியுடன் மணியும் மௌனமானான். ஆனால், அடுத்த அறையிலிருந்த வாசு — லட்சுமியின் கணவர்?



அவள் அப்பாவியாக உறங்கிக் கொண்டிருந்தாள். கன்னத்தில் மைக் கறை; முகத்தில் இளம் சிவப்பு; சினிமா பார்த்த அசதி உடலில். அவளை உற்று நோக்கினார், இது வரை அடுத்த அறைப் பேச்சைக் கேட்டு மனம் சலித்த அவர் — வாசு!

இது அவருக்கு முதல் அநுபவமில்லை. ஆனால் இதற்கெல்லாம் காரணம் யார்? எது? விதியா? அவரா?

சினிமா உலகம் என்றாலே படுகுழி, பாவம் என்று உதறி, தூய வாழ்வு வாழ்ந்த லட்சுமி இந்த நிலைக்கு ஆளானது ஏன்? அதைக் கண்டிக்க இயலாமல் அவரைத் தடுப்பது அவரது கையாலாகாத்தனமா? மனைவியை அடக்க முடியாத ஆண் மகனா அவர்?

“லட்சுமி, நான் சொல்வதைக் கேள். இனியும் நீ இந்தப் படத்தைப் பார்க்க வேண்டாம்.”

“என்ன.... ஏன்?....”

“லட்சு...மி!... நான் என்னவென்று சொல்ல...?” வாசு குழறினார்.

“ம்... தெரிகிறது உங்களுக்கும் எல்லோரையும் போல் சந்தேகம் வந்துவிட்டது இல்லையா?”

“அப்படி எனக்கு வந்தால் பரவாயில்லையே? தப்பு என்னுடையது என்றிருப்பேனே... ஆனால்....”

“ஆனால் என்ன? சொல்லுங்கள்...”

"வந்து... வந்து... தினம் இரண்டு ரூபாய் நமக்குக் கட்டி வருமா ?...."

"ஏன் ? பாங்கில் இருபதினாயிரம் வைத்திருக்கிறீர்களே?...."

"ஐயோ.... லட்சுமி... என்னைக் கொல்லாதே...." வாக ஒரு கணம் துடித்தவர் சமாளித்துக் கொண்டார் "அது பெரியவள் கல்யாணத்துக்கல்லவா? தவிர இப்படித் தினம் சினிமா பார்த்தால் உன் உடம்பும் கெடாதா ?"

"என் உடம்பு என் உடம்பு இந்த உடம்பு கெட்டால் என்ன? இந்த உடம்பின் உடம்பு, என் சதை, என் இரத்தம்..." லட்சுமி நெஞ்சைப் பிடித்துக் கொண்டு சோபாவில் விழுந்தாள்.

"அட ராமா ! போ... போ... நீ போ, லட்சுமி !" அவர் தோல்வியுடன் வெளியேறினார்.

"இப்படி ஓர் ஆகாத்தியமா...! நாலு அறை விட்டு 'இடி...வீட்டில்' என்று காலை ஒடிக்காமல்...." காமாட்சி கப்புவிடம் காதைக் கடித்தாள்.

மணி நான்கு அடித்தது. லட்சுமியின் உடலில் ஏதோ முறித்து எடுப்பது போல் இருந்தது.

மணி ஐந்து ! உடலில் ஒரு படபடப்பு ஏற்பட்டது.

"ஏ, ரோஷம் கெட்ட மனமே, நீ சும்மாக் இட...." ஆசையைத் தடைக் கட்டினாள் லட்சுமி.

"இலங்கை வானொலி வர்த்தக ஒலிபரப்பு. 'பலே பாப்பா' என்ற படத்தில்..."

படீரென்று லட்சுமியின் உணர்ச்சிகள் பீறிட்டுக் கரையை உடைத்துக் கொண்டு எழுந்தன. அவ்வளவுதான், இனி அவளால் தாங்க முடியாது. போகட்டும், இன்னும் ஒரு வாரம்தானே இந்தப் படம்... அப்புறம் கிடைக்குமா ?

கதவைப் பூட்டினாள் லட்சுமி. சிறுவன் வழக்கம்போல் பிசுக்கிட்ட கையை ஏந்தினான். சாவியை அதில் திணித்து விட்டுப் பல ஜோடி விழிகளின் துளைக்கும் பார்வைகளுக்கு இடையே அவள் புறப்பட்டு விட்டாள், தியேட்டரை நோக்கி.

"என்ன மணி, இன்று உங்கள் வீடுகூடப் பூட்டியிருக்கிறதே...." வாக வியப்புடன் வினவினார்.

"ஆமாம். கிளப்பில் ஏதோ ஆர்ச்-செஸ்ட்ராவாம். வீணை வாசிக்க கீர்சனுக்கு இவள் போயிருக்கிறாள். காலையிலேயே சொன்னாள்...."

"அதனால் என்ன? ஏதோ ஒரு நாள், இன்று எங்கள் வீட்டுக்குத்தான் வாருங்களேன். காப்பி சாப்பிடலாம்...." வாக மணியை அழைத்தார்.

"எதற்கு சார், சிரமம்? ஆனால் தனித்திருப்பதைவிட என் 'கம்பெனி' தங்களுக்குப் பொழுதுபோக்கு என்றால் வருகிறேன்...." மணி ஏதோ ஒருவிதக் கூச்சத்துடன் அங்கு நுழைந்தான்.

"பரவாயில்லையே... உங்கள் வீட்டில் எத்தனை பாந்தமாகக் காப்பி, டிபன், கை துடைக்க டவல் எல்லாம்கூடத் தயாராக எடுத்து வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். இப்படித்தானா ?"

"ஆமாம்.... தினமும், அதாவது, அவள் சினிமா போகும் தினங்களிலெல்லாம்...."

"அவர்களுக்கு உங்களைவிட அதிகச் சினிமாப் பைத்தியமோ...? உங்களுக்கு.... 'இன்டரஸ்ட்' இல்லை. என்ன செய்வது? இப்படித்தான் ஜோடி அமைகிறது."

"அப்படியில்லை. முன்பு எனக்குத்தான் சினிமா என்றால் ஒரு மயக்கம், வெறி, ஏன் அது ஒரு பவனச் சுரங்கம் என்ற மதிப்புக்கூட என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்...."

"ஓ!" மணி வியப்புடன் நோக்கினான்.

"பெண்கள் உடுத்தி உடனே களையும் புடவை ரவிக்கையில்கூட 'மாட்சிங்' பார்க்கிறார்கள். ஆனால் ஆயுள் முழுதும் அமைய வேண்டிய 'மாட்ச்'சில் கடவுள் விளையாடி விடுகிறார்...." மணி ஏக்கத்துடன் பூட்டியிருக்கும் தன் வீட்டைப் பார்த்தான்.

"என்னப்பா அப்படி உனக்குக்கூட ஏக்கம்...?"

"இல்லை, சார். எனக்குக் கர்நாடக இசை என்றால் விளக்கெண்ணெய். அவளோ வீணையில் கைதேர்ந்தவள். அவள் கலையை ரசிக்க முடியவில்லை என்ற குறை எனக்கு. ரசிக்கவில்லை என்ற குறை அவளுக்கு. அதுபோல் உங்கள் வீட்டில் சினிமா விஷயம்."

"நாங்கள் அப்படி இரு துருவங்களாக இருந்ததில்லைதான். எனக்குச் சினிமா வெறி. அவளுக்கு வெறுப்பில்லை. எனக்காக ரசிப்பாள். ஆனால் இதெல்லாம் அந்த 'சத்ரபதி' எங்கள் வாழ்க்கையில் குறுக்கிடும் வரையில் தான்.... அதற்குப் பின்....சுழல்... புயல்." வாக மென்று விழுங்கினார்.

மணியின் உடலுக்குள் ஏதோ குறுகுறுத்தது. வனஜாவின் குறி தவறல்ல. மனிதர் சொல்லக் கூசுகிறார்.... உடைத்துப் பார்த்து விட வேண்டும்."

"ஏன் அவர் என்ன செய்தார் ?"

"அவன் என்ன செய்தான் ? என்ன செய்யவில்லை? தவறு என் மீதுதான். அவனை வீட்டில் நுழைய விட்டிருக்கக் கூடாது. ஆனால் அவன் என் பால்ய நண்பன்..... கிளாஸ்மேட்.... பதினெட்டு வருஷங்களுக்குப் பின் அவனை நேரில் சந்தித்தால் வீட்டுக்கு அழைக்காமல் இருப்பதா ?...." வாக ஒரு முறை யோசித்தார்.

"ஓ...உங்கள் கிளாஸ்மேட்டா?....ஜெனலக்ஷி?" மணி நினைவூட்டினான் மறுபடியும்.

"ஆனால், அந்த நட்புக்கு நான் வருந்துகிறேன், மணி! பல வருடங்கள் கழித்து ஏதோ ஒரு படத்தின் நூறாவது நாள் கொண்டாட்டத்தில் சந்தித்த அவனை, ஊருக்கும் மனைவிக்கும் எதிரே ஏதோ எனக்கு அது ஒரு பெரிய பேறு போல் அவனை வீட்டுக்கு அழைத்தேன். ஆனால்...."

"ஆனால்...?" மணி பரபரத்தான்.

"ஆனால், என் வாழ்வே ஒளியிழந்து விட்டது, மணி. இன்பம் அஸ்தமித்து விட்டது. அவன் தொழில் அது ! அவனை என்ன சொல்ல! தவறியவன் நான், மணி..." திடீரென்று வாக விம்மினார்.

மணி தர்மசங்கடப்பட்டான். கதை நின்றுபோய்விடுமோ என்ற கவலை, நண்பர்

# வாழ்வில் முன்னேற விரும்பும் இளைஞர்களில் நீங்களும் ஒருவரா?

முன்னேற விரும்புவோர்க்கு வாழ்வே ஒரு எதிர்நீச்சல்.
அதைச் சமாளிக்க இடையற்ற ஆர்வம், ஈடில்லாமுயற்சி,
உத்வேகம் முதலியன உறுதுணை நிற்கும்.

இவை ஒருங்கிணைந்த இளைஞரா நீங்கள்?

அப்படியானால் உங்களுக்கேற்ற சைக்கிள் பிலிப்ஸ்
உங்கள் துடிப்புமிகு தன்னம்பிக்கை, உறுதிமிகு ஆர்வம்,
இவற்றை அப்படியே பிரதிபலிக்கிறது பிலிப்ஸ் சைக்கிள்.

உயரிய எஃகினால் நுண்ணிய வேலைப்பாட்டுடன்
உருவாக்கப்படும் பிலிப்ஸ் உறுதியில் தன்னிகரற்றது,
சவாரிக்கு சுகமானது, தோற்றத்தில் எடுப்பானது.





இந்தியாவில் தயாரிப்போர்: டி ஐ சைக்கிள்ஸ்
ஆஃப் இந்தியா, அம்பத்தூர், சென்னை-53
உரிமையாளர்கள்: டியூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆஃப்
இந்தியா லிமிடெட், சென்னை-1
பதிவு பெற்று உபயோகிப்போர்.
• J.A. பிலிப்ஸ் கம்பெனி லிமிடெட்,
யு.கே.வின் பதிவுபெற்ற டிரேட் மார்க்குகள்

TIC/PH/5382

வெற்றிப்பாதையில்
வேகமாக முன்னேற

## பிலிப்ஸ்

சைக்கிள்

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக









கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோ ஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது**

நிக்கோலஸ் (N) தயாரிப்பு

AS.17.TAM

பெண் பிள்ளை போல் அழுகிறீரே என்ற பச்சாத்தாபம்.

"என்ன செய்வது? சில சமயம் நம்மை அறியாது ஏற்படும் செயல்கள் அப்படிப் பலன் அளிக்கின்றன. பாம்பைப் பழுதை என்று வாரி எடுத்தால்..." மணி தேற்றினான்.

"எஸ்.... எஸ்.... அதேதான். சினிமா மயக்கம், நண்பனின் தேனூறு பேச்சு என்னைக் கவர்ந்தன. அவனுக்கு என் குடும்பத்தில் சகல சுதந்திரமும் அளித்தேன். என் குழந்தைகள் அவனைச் சித்தப்பா என்று அழைத்தன. விருப்பப்படி என் வீட்டுக்கு வருவான். சில சமயம் அவனது பிரும்மாண்டமான கார் வந்து என் குழந்தைகளை அழைத்துச் செல்லும். அவர்களை ஆடிப் பாடச் சொல்லுவான். தின்பண்டங்கள் வாங்கித் தருவான். மணமாகிக் குழந்தைகள் இல்லாமலே மனைவியை இழந்தவன் குழந்தைகளைத்தான் விரும்புகிறான் என்று நினைத்தேன்..... ஆனால் என் மனைவி ஆதிமுதலே இதை வரவேற்கவில்லை...."

"பெண்கள் மனம் ஆரம்பத்தில் எதிலும் உஷாராகவே இருக்கும். பழகப் பழகத் தான் ஏமாறும்..." என்று மணி அநுதாபப்பட்டான்.

"ஆம்.... ஆம்... இங்கு ஏமாந்தது நான் தான். நண்பனின் ஆசை மொழிகளில் மயங்கி என் வாழ்வின் இன்பத்தையே பறி கொடுத்து விட்டேன். மணி! இனி நான் வெறும் நடைப்பிணம்...."

"எப்படிப்பட்ட 'துரோகி' அந்தச் சத்ரபதி. அவனை மக்கள் எப்படி மயங்கிப் பாராட்டுகின்றனர்!"

"சீ... அப்படிச் சொல்லாதே! விதி!"

"சும்மாயிருங்கள் ஸார்... பால் வைத்தவனையே பிடுங்கும் பாம்பு போல. விதி விதி என்றுதான் நாம் ஏமாறுகிறோம். சகோதரனுக்கு ஒப்பானவர் நீங்கள். உங்கள் மனைவி அவனுக்குத் தாயார் போல. அப்படியிருக்க..." மணி உண்மையான பச்சாத்தாபத்துடன் படபடத்தான்.

வாசு திடுக்கிட்டார். "என்ன, என்ன சொல்கிறாய் நீ, மணி?...." திடீரென்று அவன் குரல் சீறியது: "லட்சுமியைப் பற்றி அப்படிப் பேச உனக்கு, ஏன் எனக்கும்கூட உரிமையில்லை. வாயைக் கழுவு...."

"ஏன், ஸார்.... உங்கள் வீட்டவர் தவறியிருக்க முடியாது. ஆனால் நண்பன்...."

"ஐயோ மணி...! நேர்ந்த தவறு அதல்லடா.... முட்டாளே... உலகமே ஒரு காமாலைக் கண் வியாதிக்காரர்தானா? மணி அவன் தன்னை இழக்கவில்லையடா! ஆனால் நான்தான் அவன் பேச்சைக் கேட்டு என் அன்பு மகளை...."

"யார் யாரை? மீனுவை விடப் பெரிய பெண் இருந்தாளா உங்களுக்கு? அவளை இந்த நண்பன் என்ற நச்சுப் பாம்பு...."

"சீ..... குறுகிய வட்டத்துக்குள்ளேயே உப்புக்கோடு ஆடும் அறிவு! நான் இழந்தது மனைவியையும் அல்ல; நண்பனுக்குக் கிடைத்தது என் மகளின் காதலும் அல்ல. என் மகள் மோகனா... பெயருக்கேற்ற அழகி, வெடுக்கென்ற பேச்சு. துடுக்கான செயல், பாட்டு, ஆட்டம், படிப்பு எல்லாம் பளிச்!... அவளே எனக்கு ஒரு பரிசு!... ஆனால் ரோஜாப் 'பிஞ்சு'! பன்னிரண்டு வயதுச் சிறுமி.... வயதையும் விடக் கவர்ச்சியான வளர்ச்சி! நண்பனின் கண்கள் தொழில் முறையானது! அவள் கலை என்றான், பணம் கலை என்றான்; உன் மகள் பிறவி நடிகை என்றான், நீ பழப் பணக்காரன் என்றான். நான் மயங்கினேன். தடை சொன்ன லட்சுமியைத் தட்டி விட்டேன். குழந்தையுடன் சென்னை சென்றேன். நண்பன் பேச்சுத் தவறவில்லை. மூன்று படங்கள் ஒவ்வொன்றிலும் அவள் குழந்தையாக, மாணவியாக, தங்கையாக... நான்காம் படம் 'புக்' ஆகும் சமயம்.....

குழந்தை நட்சத்திரப் பொறி உதிர்ந்து விட்டது. மண்ணுக்குள்! எல்லாம் ஒரு வருடத்துக்குள்.... இறுமாப்புடன் பெண்ணை அழைத்துச் சென்றவன் இருபதினாயிரம் ரூபாயுடன் மனைவியிடம் திரும்பினேன், குற்ற மனத்துடன் விதி வஞ்சித்து விட்டது. யார் மீதும் தவறில்லை. சாவு என்றும் வரும். ஆனால் லட்சுமி அதை ஏற்கவில்லை. வயதுக்கு மீறி, ஆட்டி வைத்துக் குழந்தையைப் பணத்துக்குப் பலியாக்கி விட்டேன் என்று குற்றம் சாட்டினாள். தாயாரின் கொதிக்கும் வயிற்றை எந்தச் சக்தியாலும் தணிக்க இயலாது. அவள் தன் தாயாரிடம் சென்றாள். பின் வேறு வழியின்றி மூன்று வருடங்களுக்குப்பின் மற்ற குழந்தைகளின் எதிர்காலத்துக்காக என்னுடன் கூடி வாழ வந்தாள். பழைய சூழ்நிலை அவள் துயரத்தை நினைவூட்டும் என்று இங்கு வந்தேன். ஆனால் துரதிர்ஷ்டம் தொடருகிறது. வந்த மறு மாதமே அந்தப் படங்கள் இங்கு வந்து விட்டன.

சிலர் இறந்தபின் சின்னம் உலகில் மிஞ்சுவதில்லை; சிலரின் நினைவு மட்டும் சில நாட்கள் இருக்கும்; சிலரின் குரலை மட்டும் கேட்கலாம்.... ஆனால் என் லட்சுமியோ தன் குழந்தையைச் சினிமாவில் இரத்தமும் சதையும் உடலும் உயிருமாக, குறும்புப் பேச்சுமாகப் பார்க்கிறாள். அவளுக்குத் தெரியும் அது மாயை என்று. வாழ்வே மாயை என்பர் பெரியோர். அதில் சினிமா இன்னொரு மகா மாயை. ஆனால் அறிவாளியான என் லட்சுமிக்கு இன்று அந்தச் சினிமாதான் புராணம். அது ஓடும் தியேட்டர் கர்ப்பக்கிரகம். ஒரு குற்றவாளியின் நெஞ்சுடன், மனைவியின் அமைதியை வேண்டும் கணவன் என்ற நிலையுடன், நான் அவளைத் தடுக்கவில்லை. ஏனென்றால் அவள் வெறும் சினிமா ரசிகை அல்ல!

மணி.... மணி... ஏனப்பா, நீ எதற்கு அழுகிறாய்?" வாசு வியப்புடன் நோக்கினார்.

லட்சுமி கதவை இழுத்துப் பூட்டினாள். சிறுவன் சாவியை வாங்கிக் கொண்டான். மௌனமாகப் படி இறங்கினாள் அவள். இன்று அவளைப் பல ஜோடி விழிகள் துளைத்தெடுக்கவில்லை. கூரிய அவற்றின் பார்வை குவிந்து அங்கிருந்து பல முத்து மணிகளை உதிர்த்து, கன்றைத் தேடிச் செல்லும் அந்தத் தாயின் பாதங்களில் அர்ப்பணித்தன. தெரு வாசலில் பஞ்சடைத்த ஒரு கன்றை எதிரே பால்காரன் கொண்டு வந்து வைக்கத் தாய்ப் பசு கரவாது பாலைச் சுரந்தது.

# விவசாயத்தில் இன்று



## வேதனையின் சாதனை

சென்னை சர்க்கார் உணவு உற்பத்தியைப் பெருக்குவதில் தீவிர முயற்சி எடுத்து வருகிறதல்லவா? அதில் நம் பங்கும் இருக்க வேண்டுமென்று நான் தீவிர விவசாயம் செய்யப் பெருவளை வாய்க்காலிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொள்ள அனுமதி கோரிச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு 6-1-65ல் மனுச் செய்து கொண்டேன்.

நான் கடிதங்களுக்கு மேல் கடிதங்கள் எழுதவே, என் உபத்திரவம் தாளாமலோ என்னவோ, ஒரு வருடம் இரண்டு மாதங்கள் கழித்து 3—3—66ல் மண்ணச்சநல்லூர் ரெவின்யூ அதிகாரியிடமிருந்து ஆற்றுத் தண்ணீர் சாலையைக் கடந்து செல்ல வேண்டியிருப்பதால் டிவிஷனல் இஞ்சினீயர் அவர்களிடமிருந்து ஒரு வாரத்துக்குள் அனுமதி வாங்கி அனுப்பி வைக்கும்படி கடிதம் வந்தது. பிறகு 21—6—66அன்று ஆற்றுப் பாதுகாப்புக் கோட்டம் திருச்சி நிர்வாகப் பொறியாளர் 10 குதிரைகள் வேகமுள்ள இறைவை இயந்திரம் வைத்துக் கொள்ள அனுமதி வழங்கும்படி கலெக்டர் அவர்களுக்குச் சிபாரிசு செய்திருந்தார்.

பிறகு திருச்சி டிவிஷனல் என்ஜினியர் அவர்களிடமிருந்து 16—9—66ல் வந்த தபாலில் ரூபாய் மூவாயிரம் செலுத்த இசைந்தால் என் கோரிக்கை கவனிக்கப்படும் என்று கண்டிருந்தது. நான் மனு கொடுத்த தேதி 6—1—65 லிருந்து என் மனு தள்ளுபடி ஆகாத தாலும் எல்லா விவரங்களும் கேட்டுக்கொண்டிருப்பதாலும் எப்படியும் தண்ணீர் பெற அனுமதி கிடைக்கும் என்று நம்பி, திருச்சி மாவட்ட விவசாய ஆபீசிலிருந்து புல்டோசர், டிராக்டர் ஆகியவற்றைக் கொண்டு வந்து பெருந் தொகை செலவு செய்து தரிசாகக் கிடந்த நிலத்தைச் சாகுபடி செய்ய ஏற்றவாறு திருத்தினேன். 1—8—67ல் என் மனு தள்ளுபடி செய்யப்பட்டிறது என்று தபால் வந்தது.



என் மனுவை மறுபரிசீலனை செய்யும்படி கோரி மனுச் செய்தேன்.

காலஞ்சென்ற தமிழ் நாடு விவசாய அமைச்சர் மாண்புமிகு ஏ. கோவிந்தசாமி அவர்கள் திருச்சி வந்திருந்த சமயம் இது விவரம் பற்றி அவரிடம் எடுத்துச் சொன்னேன். மந்திரி அவர்கள் 'நான் சென்னையில் இருக்கும் சமயம் வந்தால் உங்கள் மனுவைப் பார்த்து சீஃப் இன்ஜினியர் அவர்களிடம் இதைப் பற்றிச் சொல்கிறேன்' என்றார்.

பிறகு சென்னை சென்று சீஃப் இன்ஜினியர் ஆபீசில் விசாரித்தேன். 'உங்கள் மனு சம்பந்தப்பட்ட பேப்பர்களைத் தஞ்சாவூர் டிவிஷனல் இன்ஜினியர் ஆபீசுக்கு அனுப்பியிருக்கிறோம்' என்று சொன்னார்கள். தஞ்சாவூர் சென்று கேட்டதில் உங்கள் ஃபைலைத் திருச்சி ஆபீசுக்கு அனுப்பியிருக்கிறோம் என்று சொன்னார்கள். திருச்சி ஆபீசில் சென்று கேட்டதில் சென்னை சீஃப் இன்ஜினியர் ஆபீசுக்கு அனுப்பிவிட்டதாகச் சொல்கிறார்கள்.

தீவிர விவசாயம் எங்கே, யார் யாரிடம் உதவமாக வேண்டும் என்று அரசினர் விரும்புகிறார்களோ தெரியவில்லை.

தா. கோ. ம. ஆறுமுகம் செட்டியார்
மண்ணச்சநல்லூர்.

## பூச்சி மருந்து

சென்ற டிசம்பர் 8ந்தேதி Biltex என்னும் பூச்சி மருந்து வாங்குவதற்காக எங்களுடைய பஞ்சாயத்து யூனியன் (அணைக்கட்டு) விவசாயக் கிடங்குக்குச் சென்றேன். மேற்படி பூச்சி மருந்தின் விலை என்ன என்று அலுவலகத்தில் உள்ள எழுத்தரைக் கேட்டதற்கு ரூ. 7—18 காசு என்று சொன்னார். ஆனால் அப்பூச்சி மருந்தின் நியாயமான விலை ரூ.6.62 காசுதான். அது எனக்குத் தெரிந்திருக்கக் காரணம் மேற்கண்ட தேதியில் என்னுடைய உறவினர் ஒருவர் அம்மருந்தை 6.62 காசு என வாங்கி வந்தார். எனவே நான் மருந்தின் நியாயமான விலையை எடுத்துக் கூறி, 'ஏன் 7.18 காசு எனக் கூறுகிறீர்கள்?' எனக் கேட்டதற்கு, பருத்திக் கொட்டையின் விலையும் (அரைக் கிலோ பருத்திக் கொட்டை விலை 56 காசு.) அதனுடன் சேர்த்துள்ளேன்' எனச் சொன்னார். 'பருத்திக் கொட்டை தேவையில்லை. எனக்குப் பூச்சி மருந்து மட்டும் தான் தேவை' எனச் சொல்லியதற்கு அவ்வெழுத்தர் 'பருத்திக்கொட்டை வாங்கினால் ஒழியப் பூச்சி மருந்து கொடுக்க முடியாது' எனக் கூறிவிட்டார். நானும் வேறு வழியின்றி மேற்கண்ட பூச்சி மருந்தும் பருத்திக் கொட்டையும் வாங்கி வந்தேன்.

வி. துக்காராம்
ரெட்டியூர்.



# முதலும் முடிவும்

ஜி. கே. பொன்னம்மாள்

**க**திரவன் கடலினுள் மறைந்து வானத்தைச் சந்திரனுக்கு விட்டுவிட்டான். காலையிலிருந்து மாலை வரை உழைத்த சோர்வுடன் தெய்வானை மண் ரஸ்தாவை உதைத்துத் தள்ளிக் கொண்டு வேகமாகத் தன் குடிசையை நோக்கி நடந்து கொண்டிருந்தாள். பசி அவள் வயிற்றைக் கிள்ளியது. வேலை செய்யும் வக்கில் வீட்டில் கொடுத்த சோறு, குழம்பைக்கூட நோய் வாய்ப்பட்டிருக்கும் தன் கணவனுக்காக, அலுமினியத் தூக்கில் போட்டுச் சாப்பிடாமல் எடுத்து வந்து விட்டாள்.

சரியாக இலை போட்டு உட்கார்ந்து சாப்பிட்டு எத்தனை நாட்கள் ஆகி விட்டன? அவள் கணவன் செந்தில் பனை மரத்தில் "நுங்கு" அறுத்து வியாபாரம் செய்பவன். ஒரு நாள் மரத்திலிருந்து பிடி தளர்ந்து கீழே விழுந்து விட்டான். தெய்வானையின் தாலி பாக்கியம் அவன் இறக்கவில்லை. நோயாளியாக அவன் படுத்த படுக்கையாகி விட்டான். பிழைப்புக்கு வேறு வழியில்லாமல் ஒரு வக்கில் வீட்டில் பாத்திரம் தேய்த்து, வீடு பெருக்கி, இப்படி எல்லா வேலையும் பத்து ரூபாய்க்குச் செய்தும் இரவில் இலை தைத்தும் தன் அரை வயிற்றையும், காப்பாற்றிக் கணவனுக்கு வேண்டிய மருந்தையும் வாங்கிக் கொண்டிருந்தாள். ஆரோக்கியமாக உழைத்து, தினமும் நாலு ரூபாய் வரையில் சம்பாதித்துக் கொண்டிருந்த புருஷன் படுத்த பிறகு அவளுக்கு வாழ்க்கையே இருண்டு விட்டது.

ஆயிற்று, இன்னும் இரண்டு விளக்குக் கம்பங்களைத் தாண்டி விட்டால் அவள் குடிசை வந்து விடும். மாலையில் கணவனுக்குத் தேநீர்கூடக் கொடுக்க ஆளில்லை. பக்கத்து வீட்டு ஆயாவிடம் இரண்டணா கொடுத்து "அவருக்கு டீயும் பன்னும் வாங்கிக் குடு, ஆயா!" என்று சொல்லியிருந்தாள். ஆயா கொடுத்திருப்பாளோ, என்னமோ?

அவள் மேல் உராய்ந்து கொண்டு போவது போல் ஒரு "வேன்" புழுதியை வாரி இறைத்துக் கொண்டு அவளைத் தாண்டிக் கொண்டு போய் ஒரு குடிசையின் முன்னால் நின்றது. வண்டியிலிருந்து கலகல வென்று சிரித்துக் கொண்டே, ஜயந்தி கீழே இறங்கியதும் வண்டி கிளம்பியது. கீழே இறங்கின ஜயந்தி தெய்வானைக்காகக் காத்திருந்தாள். மேல் மூச்சு வாங்க ஜயந்தியை நெருங்கி வந்த தெய்வானைக்கு ஜயந்தியின் தோற்றம் வியப்பை அளித்தது. இரண்டு மாதங்களுக்கு முன்னால் எலும்பும் தோலுமாகத் தன்னைப்போல் ஒரு வீட்டில் வேலை செய்து கொண்டிருந்தவள் யாரோ சினிமாவுக்கு உதவி நடிகைகளை அழைத்துப் போகிறவன் கண்ணில் பட்டு அவளும் சினிமாவில் நுழைந்து விட்டாள். இப்பொழுது அவள் உடலில் ஒரு பளபளப்பும், மினுமினுப்பும் தெரிந்தன. பெரிய மனிதர்களுடன் பழகியும் பேசியும், அவள் பேச்சில்கூட ஒரு நாகரிகமும் மவுசும் கலந்திருந்தன. முன்பு அள்ளிச் செருகிக் கொண்டிருந்த கொண்டைக்குப் பதிலாகத் தலையை இழைய வாரிப் பின்னி இருந்தாள். அழகான வாயில் புடவையும், அதற்கேற்ற சிவந்த நிறத்தில் நாகரிக மோஸ்தரில் தைத்த சோளியும், காலில் செருப்பும் அணிந்து கவர்ச்சியுடன் இருந்தாள். முகத்தில் படப் பிடிப்புக்கான ஒப்பனையைக் கலைத்ததினால், சற்றுச் சிவந்த நிறமும் கண்ணில் மையும் இருந்தது அவள் அழகை அதிகப்படுத்தியது. ஒரு கணம் எதுவும் பேசத் தோன்றாமல் மலைத்து நின்றுவிட்டாள் தெய்வானை. ஜயந்திதான் பேச்சை ஆரம்பித்தாள்.

"இப்போத்தான் படப் பிடிப்பு முடிந்து வர்றேன். இன்று பிரபல நடிகை தாரா தேவியுடன்தான் ஷூட்டிங்கு நடந்தது ஆமா, நீ இப்பத்தான் வேலை முடிஞ்சு வர்றியா? இந்தப் பத்து ரூபாய்க்கு நாள் முழுதும் மாடுபோல் உழைப்பதுதான் உனக்குப் பிடிச்சிருக்கு; உன் தலையெழுத்து. நான் வேறு எதைச் சொல்ல? சரி, வரட்டுமா? நாழியாறது. போய்க் குளிக்கணும். மறுபடியும் நாளைக் காலையில் படப் பிடிப்பு இருக்கு" என்றாள். அவள் குரலில் கூடவா இப்படி ஒரு மாற்றமும் நயமும் வரவேண்டும் என்று தோன்றியது தெய்வானைக்கு.

குடிசைக்குள் ஒரே இருட்டாக இருந்தது. கட்டிலிலிருந்து முக்கலும் முனகலுமாகச் செந்திலின் வேதனைக் குரல்

கேட்டுக் கொண்டிருந்தது. தெய்வானை முதலில் மாடத்திலிருந்த சிம்னி விளக்கை ஏற்றினாள். விளக்கு வெளிச்சத்தில் கணவன் முகத்தைப் பார்த்தாள். தாங்க முடியாத வலியால் அவன் துடித்துக் கொண்டிருந்தான். காலில் இலேசாக வீக்கம்கூடக் கண்டிருந்தது.



ஆயா வாங்கிக் கொடுத்த 'டீ'யும், பன்னும் அப்படியே கட்டிலருகே இருந்தன.

"எனக்கு இந்த வேதனை தாங்க முடியலே தெய்வானை. கோதுமைத் தவிடு ஒத்தடம் கொடுத்தால் நல்லது என்று வைத்தியரு சொன்னாரு" என்று முனகினான் செந்தில். தெய்வானைக்குக் கணவனின் வேதனைக் குரலைக் கேட்டதும் பசி இருந்த இடம் தெரியாமல் போய் விட்டது. "முதல்லே நீங்க ஏதாவது வயிற்றுக்குச் சாப்பிடணும். அப்பொத்தான் உடம்பிலே தெம்பு இருக்கும். சாப்பிடுங்க. பின்னாலே ஒத்தடம் போடறேன்" என்று அவனை உட்கார வைத்துத் தான் கொண்டு வந்திருந்த சாதத்தில் கொஞ்சத்தை ஓர் அலுமினியத் தட்டில் வைத்தாள். அவன் இரண்டு வாய் சாப்பிட்டு விட்டு, "எனக்கு ருசிக்கல்லே; வேண்டாம்" என்று படுத்து விட்டான்.

கோதுமைத் தவிடால் கணவனுக்கு ஒத்தடம் கொடுத்துக் கொண்டே இருந்தாள் தெய்வானை. மணிக்கூண்டில் மணி ஒன்பது முறை அடித்து ஓய்ந்தது. தெய்வானை பசியும், மன வேதனையுமாகத் துவண்டு விழுந்து விடுவாள் போலிருந்தது. "நீயும் ஏதாவது சாப்பிடு தெய்வானை. நாளைக்கு வேலைக்குப் போகணுமே?" என்றான் செந்தில். அவளுக்குக் கணவனிடம் கோபம்தான் வந்தது.

"ஆமாம், உங்களுக்கு என்கிட்டே பெரிய அக்கறை தான் தெரியுது. நான் இப்படி ஓடாக உழைச்சாத் தானே உங்களுக்குத் திருப்தி? பக்கத்து வீட்டு 'ஜெயந்தி' சினிமாவிலே சேர்ந்து ஒரு நாளைக்குப் பத்து ரூபா சம்பாதிக்கிறா. எனக்கும் வேலை வாங்கித் தரேன் என்கிறா. நீங்கதான் சம்மதிக்க மாட்டேன் என்கிறீங்க" என்று நிறுத்தினாள். செந்திலுக்கு எப்படித்தான் அப்படி ஒரு பலம் வந்ததோ, தெரியாது. கட்டிலில் எழுந்து உட்கார்ந்தான். "இதோ பாரு, தெய்வானை. ஜெயந்தியின் பெருமையை இனிமேலே பேசாதே. நான் என்றைக்குமே இப்படி நோயாளியாக இருக்கமாட்டேன். நான் குணமடைந்து விட்டால் நீ எங்கும் வேலைக்குப் போக வேணாம். அந்த ஜெயந்தி அவளை ஸ்டுடியோவுக்கு அழைத்துப் போகும் ஆளிடம் இளிச்சு இளிச்சுப் பேசறதும், அவளைப் பற்றி இந்தக் குப்பத்திலே பேசிக்கிறதும் எனக்குத் தெரியும். என் உயிர் உள்ளவரை உன்னை அப்படியெல்லாம் வேலைக்கு அனுப்ப மாட்டேன். அந்த ஆளு சில்க் சட்டையும், மைனர் செயினுமாக இந்தப் பக்கம் சுத்திக்கிட்டிருக்கிறதும் எனக்குத் தெரியும். அந்தப் பக்கம் ஏதாவது திரும்பினே, நான் பொல்லாதவனாயிடுவேன்!" என்றான். ஆத்திரப்பட்டுப் பேசியதால் அவனுக்கு மூச்சு வாங்கியது.

"நீங்க உடம்பு தேறி எழுந்து வேலைக்குப் போறதுக்குள்ளே நான் உழைச்சு உழைச்சுச்

"செத்துடுவேன் போலிருக்கு" என்று சொன்ன தெய்வானையின் தாடையில் ஓர் அறை விழுந்தது. அதைத் தொடர்ந்து அவள் கையிலிருந்த கோதுமைத் தவிட்டு மூட்டையைப் பறித்துத் தூர எறிந்தான்.

பிறகு இருவரும் அதிகமாகப் பேசிக் கொள்ளவில்லை. தரையில் இறைந்து கிடந்த கோதுமைத் தவிட்டைப் பெருக்கித் தள்ளி விட்டுப் புடவைத் தலைப்பைத் தரையில் போட்டுப் படுத்த தெய்வானைக்கு மன உளைச்சலும், உடல் அலுப்புமாகத் தூக்கமே பிடிக்கவில்லை. உடம்பெல்லாம் அறு அறுவாக வலித்தது. வக்கீல் வீட்டில் கொஞ்சம் வேலையா? எது எப்படி இருந்தாலும் அந்த வேலைதான் அவளுக்கு அரை வயிற்றுக் கஞ்சி ஊற்றிற்று. தன் கணவன் உடல் தேறி விட்டால் பிறகு கவலை இல்லை. நன்றாக நாலு நாட்கள் உண்டு உறங்கினால் இந்தக் களைப்பெல்லாம் பறந்துவிடும். இடையே தலையைச் சொறிந்து கொண்டாள். நன்றாக எண்ணெய் தேய்த்துக் குளித்துத் தலையைச் சீப்பால் வாரி எத்தனை நாட்களாயின? எல்லாம் வாழ வசதி இல்லாத கொடுமை. இப்படியெல்லாம் ஓடியது அவள் சிந்தனை.

எத்தனை நேரம் தூங்கினாளோ தெரியாது. பக்கத்து வீட்டு ஆயாவின் சேவல் கோழி கூரை மேல் உட்கார்ந்து, "கொக்கரக்கோ" என்று பல முறை கூவியதைக் கேட்டுக் கண்ணை விழித்தாள். கணவன் கட்டிலில் படுத்து நன்றாக உறங்கிக் கொண்டிருந்தான். ஒரு செம்பு குளிர்ந்த நீரில் முகத்தைக் கழுவிக் கொண்டு நெற்றியில் பளிச்சென்று காலணா அளவுக்குக் குங்குமத்தை வைத்துக் கொண்டு அலுமினிய டம்ளரில் தேநீரை வாங்கிக் கொண்டு வந்து கணவனை எழுப்பினாள். கண்ணை விழித்த செந்தில் அவள் தாடையில் அடிபட்ட வடு இருப்பதைப் பார்த்துக் கண் கலங்கினான்.

"தெய்வானை! நான் கையாலாகாதவன். உழைத்துக் களைத்து வரும் உன்னை அடிச்சிட்டேன். என்னை மன்னிச்சுடு" என்றான். அவன் வார்த்தைகள் அவளுக்கு அமுதமாக இருந்தன. "நீங்க ஒன்றும் பேசாதீங்க, அத்தான். இந்த டீயைச் சாப்பிடுங்க. நான் வேலை முடிஞ்சு சீக்கிரமே வந்திடறேன். வந்து உங்களுக்குப் பிடிச்ச முருங்கைக் கீரைக் கறி பண்ணி ரசம் பண்ணுகிறேன். நன்றாக நீங்கள் சாப்பிட வேண்டும்" என்றாள்.

"எனக்கு இன்று உடம்பு எவ்வளவோ தேவலை. நீ ஏதாவது சாப்பிட்டு விட்டுப் போ" என்றான் செந்தில் அன்புடன். அந்த ஓர் அன்புச் சொல்லில் அவள் மன வருத்தமெல்லாம் மறைந்து, முகத்தில் புன்னகை தவழ்ந்தது. அவள் பழைய சோற்றைக் கலக்கிக் குடித்து விட்டு வேலைக்குக் கிளம்பினாள்.

வீட்டிலிருந்து ஒரு பர்லாங் போவதற்குள் பல்லை இளித்துக் கொண்டு சிகரெட்டுப் புகையை ஊதியவாறு றூலத்தியைச் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போன ஆள் வருவது தெரிந்தது. அவனைக் கண்டதுமே தெய்வானை ரஸ்தாவின் மறு பக்கம் ஒதுங்கிச் சற்று வேகமாக நடந்தாள். அவன் விடாமல் அவள் எதிரே வந்து நின்று, "தங்கச்சி! வேலைக்குக் கிளம்பிட்டியா? பத்து நாட்களாக ஒரு வேலையாக அலைந்து கொண்டிருக்கிறேன். அதாவது பிரபல நடிகை 'மதன தேவி'யைப் போல் சாயலுள்ள ஒரு பெண் தேவை. ஒரு சீனில் அதாவது அவுங்களுக்குப் பதிலா நடிக்க வேண்டும். ஒரு நாள் வேலை. நூறு ரூபாய் கொடுப்பாங்க. உனக்கு அவங்க சாடை இருக்கிறது. அதுதான் உன் வீட்டையே சுத்திக்கிட்டு இருக்கேன். நீ நடிக்க இஷ்டப்பட்டா முன் பணம் இப்பவே இருபத்தைந்து ரூபாய் கொடுத்திடறேன். அது சரி, வழியிலே நிக்க வைச்சுப் பேசிக்கிட்டிருக்கேனே? காலையிலே ஏதாவது சாப்பிட்டியா? அந்த ஹோட்டலுக்குப் போகலாம். அங்கே காப்பியும், ஸ்பெஷல் மசாலா தோசையும் மிக நன்றாக இருக்கும்" என்றான்.

அவன் பேசியவிதமும் அவன் சிரிப்பும் அவனிடமிருந்து வந்த செண்டின் வாசனையும் ஏனோ அவளுக்கு அருவருப்பாக இருந்தன. "எனக்கு வேலைக்கு நேரமாச்சு. எனக்கு ஒங்க சினிமாவும் வேண்டாம், பணமும் வேண்டாம்" என்று நடையை எட்டிப் போட்டாள்.

"தங்கச்சி! நல்லா யோசிச்சுப் பாரு. ஒரு நாள் வேலை. ரூபாய் நூறு. இரண்டு நாட்களில் நீ எனக்குப் பதில் அளித்தால் போதும். நான் என்றைக்கும் காலையிலே இந்த ஹோட்டல் வாசல்லேயே இருப்பேன்" என்று குரல் கொடுத்தான். தெய்வானை வேகமாக நடந்தாள். அவள் காதில் அவன் பேச்சு இலேசாக விழுந்ததென்றாலும், கவனியாதது போல் இருந்தாள்.

அன்று வக்கீல் வீட்டில் விருந்தாளிகள் சிலர் வந்திருந்ததனால் வேலை மென்னியைப் பிடித்தது. அப்படி வேலையில் முழுகியிருந்ததனால் அவளுக்கு எதைப் பற்றியுமே நினைக்கப் பொழுது கிடைக்கவில்லை. கிணற்றடியில் அம்பாரம் பாத்திரங்களைப் போட்டுத் துலக்கிக் கொண்டிருந்தாள். அவள் கைப்பட்ட பாத்திரங்கள் பளபளத்தன. "அக்கா! அக்கா!" என்று கூப்பிட்டுக் கொண்டே பதற்றத்துடன் வந்த ஆயாவின் பேரனைப் பார்த்து, "என்னடா, குப்பா, என்ன விசேஷம்?" என்று பதறினாள் தெய்வானை.

"உங்க ஊட்டுக்காரரு எதிர்க் கட்டிலிருந்து எழுந்து நடந்திருக்கிறார். மயக்கம் போட்டிருக்குது. பேச்சு மூச்சில்லை. எங்க ஆயா தான் அங்கே இருக்கு. உங்களை உடனே கூட்டி வரச் சொன்னாங்க. எங்க ராமு அண்ணன் டாக்டரைக் கூப்பிடப் போயிருக்காரு" என்பதற்குள் தெய்வானை, "ஐயோ!" என்று அலறி விட்டாள். அவள் எப்படி வக்கீல் மனைவியிடம் விஷயத்தைச் சொன்னாளோ, எப்படி வழி நடந்து குடிசையை அடைந்தாளோ, அதெல்லாம் அவளுக்கே தெரியாது. குடிசை வாசலில் டாக்டர் வந்திருப்பதற்கு அடையாளமாகக் கார் நின்றிருந்தது. தெய்வானைக்கு வயிற்றைக் கலக்கியது. டாக்டர் தெய்வானையிடம் "இவர் உடல் நிலை அத்தனை நன்றாக இல்லை. உடனே ஊசி போட வேண்டும். ஊசி போட்டால்தான் மயக்கம் தெளியும். இருபது ரூபாயாகும்" என்றார். இருபது ரூபாய்க்கு எங்கே போவது என்று தெரியவில்லை அவ

# மக்களின் தேர்வு

## லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்




லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் சாதாரண டீ அல்ல!

எல்லோருக்கும் உகந்த எல்லாச் சிறப்புகளும் இணைந்தது. இயற்கையிலேயே எல்லோரும் விரும்பி ஏற்பது இது!

கெட்டியான பானம்; நிறைந்த செறிவு; சிறந்த மணம். இவை மட்டுமல்ல—ஒவ்வொரு பாக்கெட்டிலும் அதிக அளவு கோப்பைகள் கிடைக்கின்றன. பருகுவதில் ஓர் இன்பம்; பிறருக்குத் தருவதிலும் ஓர் இன்பம்!

மக்களின் தேர்வு—அதுவே லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ.



**லிப்டன் என்றாலே நல்ல டீ**

LHGC.9 TAM

ளுக்கு. திடீரென்று அந்தச் சினிமாக்காரர் நினைவு வந்தது. இனிமேல் யோசிக்க நேரமில்லை. அவளுக்கு அவள் கணவன் உயிர்தான் முக்கியம். "இதோ மருந்து வாங்கி வருகிறேன்" என்று விரைந்தாள். அவள் நல்ல காலம், அந்தச் சினிமா ஆள் ஹோட்டல் அருகே பத்திரிகை படித்துக் கொண்டு நின்றிருந்தான்.

"அண்ணே, நான் நல்லா யோசிச்சுப் பார்த்தேன். நீங்க சொன்னது சரியாகவே பட்டது. முன் பணத்தைத் தயவுசெய்து கொடுங்க. நீங்க சொல்லும்போது நான் படப் பிடிப்புக்கு வரேன். ஆனால் நீங்க என் வீட்டுக்கு மட்டும் வந்திடாதீங்க. இங்கேயே இருங்க, போதும். நான் வந்து உங்களைக் கேட்டுக்கறேன். என்னை நம்புங்க. எனக்கு நிற்க நேரமில்லை" என்று பணத்துக்குக் கையை நீட்டினாள்.

"அப்பாடா, உனக்கு இப்பத்தான் புத்தி வந்தது. இந்தா பணம், இருபத்தைந்து ரூபாய். நாளைக்குக் காலையிலே ஐந்து மணிக்கெல்லாம் இங்கே வந்திடு. நான் வண்டியுடன் வந்து விடுகிறேன். அடுத்த படத்தில் உனக்கு இன்னும் பணம் வாங்கித் தருகிறேன்" என்று பல்லை இளித்தான்.

தெய்வானைக்கு எதுவுமே பேச நேரமில்லை. ஆயாவின் பேரனிடம் பணத்தைக் கொடுத்து மருந்து வாங்கி வரும்படி சொன்னாள். ஊசி போட்டதும் கண்ணை விழித்தான் செந்தில். "இனி பயமில்லை. பழரசம், முட்டை என்று நல்ல ஆகாரமாகக் கொடு" என்றபடியே டாக்டர் வெளியே சென்றார்.

இரவெல்லாம் தெய்வானைக்கு ஒரே மனப் போராட்டம். தன் கணவனுக்குப் பிடிக்காத காரியம் செய்யப் போகிறோம் என்ற எண்ணம் அவள் மனத்தைக் குடைந்து கொண்டேயிருந்தது. கணவன் குணம் அடைந்ததில் நிம்மதி ஏற்பட்டாலும் இந்த விஷயம் அவளைத் துளைத்து எடுத்துக் கொண்டிருந்தது. பொழுது விடிந்ததும் ஆயாவிடம் இரண்டு ரூபாய் கொடுத்து, "ஆயா! அவருக்கு எது வேணுமோ வாங்கிக் கொடு. இன்று வக்கீல் வீட்டில் வேலை முடித்து வர இரவு எட்டு மணியானாலும் ஆகிவிடும். அவர்கள்தான் இருபத்தைந்து ரூபாய் கொடுத்து உதவினார்கள்" என்று ஒரு பொய்யைச் சொல்லி விட்டு வெளியே வந்தாள். தெருவின் மங்கிய வெளிச்சத்தில், ஹோட்டல் வாசலில் 'வேனு'டன் காத்திருக்கும் அந்தச் சினிமா ஆளைப் பார்த்ததும், அவளுக்கு வயிற்றைக் கலக்கியது. கால்கள் மேலே நடக்க மறுத்தன. துணிச்சலை வரவழைத்துக் கொண்டு முன் நடந்தாள்.

பொழுது நன்றாக விடிந்ததும் செந்தில் கண் விழித்தான். மருந்தின் குணம்தான் போலும். அவனுக்கு நன்றாகப் பசி எடுத்தது. டாக்டர் யோசனைப்படி வெந்த முட்டையும், ரொட்டியும் பாலும் கொடுத்தாள் ஆயா. அதைப் பார்த்து வியப்புடன், "இதெல்லாம் எங்கிருந்து ஆயா, பணம் கிடைச்சது?" என்றான்.

"அந்தப் பெண் தெய்வானை மாடாக உழைக்கிறதே. அந்த வக்கீல் வீட்டில்தான்

# செக் வியாபாரம்

"என்னடா, அப்பாசாமி! ரொம்ப நாட்களாக உன்னைக் காணோமே! என்ன பண்ணிண்டிருக்கே இப்போ?"

"வானொலி நிலையம் இருக்கு பாரு! அங்கே ஒரு பெட்டிக் கடை வச்சிருக்கேன். வெற்றிலை பாக்கு விக்கிறேன்!"

"வியாபாரம் நன்னா நடக்கிறதா?"

"நன்னாக் கேட்டே போ! வெற்றிலை பாக்கு, சோடா கலர் விற்பனையை மட்டும் நம்பிண்டிருந்தால் போதுமா?"

"பின்னே வெற்றிலை பாக்குக் கடையில் வேறு என்ன வியாபாரம் நடக்கும்?"

"செக் வியாபாரம் பண்ணறேன்."

"என்ன கதை விடறே? செக் வியாபாரமாவது?"

"கதை இல்லையப்பா, நிசம். தினம் பாடறதுக்கும் பேசறதுக்கும் நடிப்பதற்கும் எத்தனை பேர் வராங்க? அவங்க ஒவ்வொருத்தருக்கும் பாடினாலும் பேசினாலும் செக்காகத்தானே கொடுக்கிறாங்க ரேடியோவிலே!"

"ஆமாம்."

"அதை மாத்தறதுக்கு ஸ்டேட் பாங்கு போய் வரதுன்னு எத்தனை செலவாகும்? குறைஞ்சது ஒரு ரூபாயாவது செலவு ஆகாதா? அப்புறம் அங்கே போய் நிக்கிற நேரத்தைச் சொல்லு!"



"பாங்குக் கணக்கிலே கட்டிப்பிட்டுப் போறாங்க?"

"எல்லோருக்கும் பாங்குக் கணக்கு இருந்தால் என்னிடம் ஏன் வராங்க?"

"நீ குபேரனோ இல்லையோ - அதனாலேதான்."

"நான் குபேரனோ இல்லையோ, ஐந்து, பத்து, ஐம்பது எந்தச் செக்காயிருந்தாலும் அரை ரூபாய் குறைச்சிண்டு அந்த நிமிஷமே பணத்தை வீசி விடுகிறேன். அதற்கு அவர்கள் ஒரே ஒரு காரியம் செய்ய வேண்டும். ரேடியோ ஸ்டேஷனிலே சரியான படி எண்டார்ஸ்மெண்ட் வாங்கி என்னிடம் செக்கைத் தள்ளி விடணும்!"

"அப்படியா?"

"ஆவரேஜாக் கணக்கெடுத்ததிலே ஒரு நாளைக்கு அறுபது செக்காவது வருகிறது. எப்படி என் வியாபாரம்? முப்பது ரூபாய் கிடைக்கும்னு நான் சொல்றது பொய் இல்லையே!.....

"டேய்! என்னடா பதில் சொல்லாமல் போறே!.... என்ன, ரேடியோ நிலையம் போகிற பஸ்ஸைப் பிடிக்கப் போறியா? ...... டேய், நான் போட்டது திட்டமாகவேதாண்டா இருக்கு. மூலதனம் வேண்டாமா? யாருமே என்னை நம்பிப் பணம் கொடுக்க மாட்டேன் என்கிறார்களடா! அதனால் இன்னும் செயலாக்க முடியவில்லையடா. உன்னிடம் பணம் இருக்கிறது எனக்குத் தெரியும். எனக்குப் போட்டியா வந்து விடாதே...அட பாவமே! இவன் எதையும் காதிலே வாங்கிக்காமலே போகிறானே!"

அன்றாப் அப்பாசாமி அப்படியே தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

- குறும்பன

## குதிரைக்கு வந்த அதிர்ஷ்டம்!

விவசாயி ஒருவர் சொந்தமாகக் குதிரை ஒன்று வைத்திருந்தார். ஒரு நாள் அந்தக் குதிரை அவருடைய மனைவியைப் பலமாக உதைத்துக் காயப்படுத்தி விட்டது. இதனால் அவள் இறந்து போனாள். நூற்றுக்கணக்கான பேர் துக்கத்துக்கு வந்திருந்தனர்.

இதைப் பார்த்து ஒருவர், "தங்களுடைய அலுவல்களையெல்லாம் விட்டு இவ்வளவு பேர் வந்திருக்



கிறார்களே! இறந்து போன பெண்மணி மிகவும் புகழ் பெற்றவராக இருந்திருக்க வேண்டும்!" என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த விவசாயி சொன்னது: "அதெல்லாம் ஒன்றும் இல்லை! வந்திருப்பவர்கள் அத்தனை பேரும் ஆண்கள். எப்படியாவது அந்தக் குதிரையை விலை பேசி வாங்கிவிட வேண்டும் என்று வந்திருக்கிறார்கள்!" -காழி ஜெயா

---

இருபத்தைந்து ரூபாய் கொடுத்தார்களாம். உனக்கு மயக்கம் என்றதும் அந்தப் பெண் எப்படிப் பதறிப் போச்சு, தெரியுமா? நீ தூங்கும்போது எழுப்ப வேண்டாம் என்று சொல்லி விட்டு வேலைக்குப் போயிருக்குது. திரும்ப இரவு எட்டு மணியாகுமாம். நீ சாப்பிடு" என்றாள் ஆயா.

செந்திலுக்குக் காலை உணவு மிகவும் பிடித்திருந்தது. எத்தனையோ நாட்களுக்குப் பிறகு ருசித்துச் சாப்பிட்டான். "பத்து மணிக்கு இதையும் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்க, தம்பி. எனக்கு வேலை இருக்கு. நான் பன்னிரண்டு மணிக்கு வந்து விடுகிறேன்" என்று கிளாஸ் நிறையப் பழ ரசத்தை அவன் கட்டிலருகே வைத்து மூடிவிட்டுத் தள்ளாடிய வாறு ஆயா வெளியே சென்றாள். தாய்க்குத் தாயாக இருந்து பணிவிடை செய்யும் அந்தக் கிழ உருவத்தைப் பார்த்துச் செந்திலுக்கு நன்றியால் கண்களில் நீர் நிறைந்து விட்டது.

வயிறு நிறைந்துவிட்ட நிம்மதியுடன் இலேசாகக் கண்ணை மூடியவாறு படுத்திருந்தான் செந்தில். கதவைத் திறந்து கொண்டு வந்த ஆயா, "என்ன அநியாயம் தம்பி? சவ ஊர்வலம் ஒண்ணு பார்த்தேன். பாவம், சின்னப் பொண்ணு இறந்து விட்டது. தாய் தகப்பன் கணவன் எல்லாரும் வயிற்றை எரிவாங்களே என்று நினைச்சுக்கிட்டிருந்தேன். ஊர்வலத்துக்குப் பின்னடி ஒரு மோட்டார் வண்டியிலே காமிராகூடப் போச்சு. 'படம் புடிக்கிறாங்க ஆயா, பாடையிலே போறவள் செத்தவள் இல்லே, பணத்துக்காக இப்படி நடிக்கறு' என்றான் என் பேரன். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. சாவு என்று வாயாலே சொல்லவே என் போன்ற கிழங் கட்டைகளுக்குக்கூட அஞ்ஞானமாயிருக்கு. இப்படி உயிரோட பாடையிலே போறதுக்கு அந்தச் சின்னப் பொண்ணுக்கு எப்படித்தான் மனம் துணிந்ததோ? அப்படி என்ன பணக் கஷ்டமோ?" " என்று வியந்தாள். செந்திலுக்கும் இது அதிசயமாகத்தான் இருந்தது. "உயிரோட பிணமாக் கிடக்கிற பெண் ஏன் அப்படி நடிக்க ஒப்புக் கொண்டாள்? அவளுக்கென்ன அப்படிப் பணக் கஷ்டம்?" என்றெல்லாம் நினைத்தான்.

அப்போது அங்கே வந்த ஜவந்தி, "செந்தில் அண்ணே! இது வரையில் என்னைத்தான் சினிமாவிலே நடிக்கிறவள் என்று ஏளனமாப் பேசிக்கிட்டிருப்பீங்க. இப்போ உங்க மனைவியையும் அந்த செட்டிலே சேர்த்துக்குங்க. இன்னைக்குப் பிணமா நடிச்சது தெய்வானைதான். அதுக்குக் கிடைச்ச முன் பணத்திலேதான் நேற்று ஒங்களுக்கு மருந்து வாங்கினு. ஆனால் ஒண்ணு மட்டும் தெரிஞ்சுக்குங்க. இந்தச் சினிமாத் தொழில் ஒரு நல்ல தொழில். அதில் நடிக்கிறவங்க கெட்டவங்க என்கிற உங்க எண்ணத்தை மாத்திப்பிடுங்க. எத்தனையோ நல்லவங்களும் இருக்கிறாங்க. ஒரு சில கெட்டதுகள் இருக்கிறதினாலே அந்தத் தொழில் கெட்டதாகி விடாது" என்றாள் படபடவென்று.

செந்திலுக்கு யாரோ தலையில் அடித்தது போலிருந்தது. அவன் சிலை போல் சற்று நேரம் உட்கார்ந்திருந்தான். அவன் கண்களிலிருந்து நீர் பெருகியது. "ஆயா! தெய்வானை சாதாரணப் பெண்ணில்லை. அவள் தெய்வப் பிறவி. நான் பிணமாகிவிடக் கூடாதே என்று அவள் எனக்காக, என் வாழ்வுக்காக, பிணமாக நடித்தாள். அவள் அன்புக்குமுன் நான் ஒரு புழுவாகத் தோன்றுகிறேன்" என்று தலையில் அடித்துக்கொண்டு அழுதான். செந்திலிடம் கேலியாகப் பேசி அவன் ஆத்திரத்தைக் கிளற வேண்டும் என்ற எண்ணத்துடன் இருந்த ஜவந்திக்கு அவன் கதறி அழுவதைப் பார்த்ததும், "ஏது, கதையே மாறி விட்டதே! இனி மேல் இங்கிருந்து பயனில்லை" என்று மெதுவாக அந்த இடத்தை விட்டு அகன்றாள்.

"அட, அழாதே, தம்பி! அந்தப் பொண்ணு தங்கக் கம்பி. எனக்குத் தெரியாதா அவளை?" என்று தேற்றினாள்.

குடிசைக்குள் பயந்தவாறு வந்த தெய்வானையைக் கண்ட அவள் கணவன், "தெய்வானை! மன்னிச்சுடு. உனக்கு என் மேலிருக்கும் அன்புக்கு இணையே இல்லை. நீ தாராளமாகச் சினிமாவில் நடிக்கலாம். உன் உள்ளம் பவித்திரமானது. இனிமேல் நான் எதற்கும் தடை சொல்ல மாட்டேன். எனக்காக நீ பிணமாக நடிச்சதை நினைக்கவே என் உடல் நடுங்குகிறது" என்றான்.

"கவலைப்படாதீங்க, அத்தான்! என்னை மன்னிச்சுடுங்க. உங்களுக்குப் பிடிக்காத காரியத்தைச் செய்துவிட்டேன் பணத்துக்காக. இதுதான் என் முதல் சினிமாப் பிரவேசமும் கடைசியும்" என்றாள் அவள் தலையை வருடியபடி.

## ஆஸ்துமா நிவாரண மூலிகை

ராஜஸ்தான் பிரபல அரசியல் சமூகத் தலைவர் காலஞ்சென்ற ஸ்ரீ சம்புநாத் அவர்களின் பேரன் ஸ்ரீ கேசவ் மோஹன்லால் ஏழைமக்களுக்கு ஆஸ்துமா நிவாரண மூலிகை வினியோகிக்கிறார். ஸ்ரீ சம்புநாத் அவர்களுக்கு இந்த மூலிகை ஒரு சந்நியாசியால் கொடுக்கப்பட்டு கடந்த 40 ஆண்டுகளாக இலவசமாக வினியோகிக்கப்பட்டது. இத்தன்னலமற்ற சேவைக்கு அரசாங்கம் உபகாரச் சம்பளம் அளித்தது. ஆனால் இந்த நற்பணியை அவர் தன் பேரனிடம் ஒப்படைத்து விட்டு துறவியானார். தற்பொழுது இப்பணியை பேரன் நடத்துவதோடு இதற்கு பண உதவி செய்யுமாறு தனவந்தர்களைக் கேட்டுக் கொள்கிறார். மூன்று டோஸ் மருந்து சாப்பிட்டதுமே ஆஸ்துமாவினால் அவதியுறும் பலர் நிவாரணமடைந்துள்ளனர். ஆஸ்துமாவினால் அவதியுறுபவர்கள் மூலிகைக்கு மேற்கண்ட விலாசத்திற்கு ஆங்கிலத்தில் எழுதவும்:

**SRI KESHAV MOHAN LAL**

**5, Haralaldas Lane, Jorabagan Park, West**
**CALCUTTA-6 (India)**

எங்களுக்கு கிளை ஆபீஸ்கள் இல்லை

மேற்கு வங்காள சங்கங்கள் ரிஜிஸ்டிரேஷன் ஆக்ட் 1961 கீழ் நிறுவப்பட்ட பாபா ஸ்ரீ சம்புநாத் சேவா கேந்திராவினால் வியாதியஸ்தர்கள், டாக்டர்கள், மருத்துவர்கள் அளிக்கும் நன்கொடையின் மூலம் ஆஸ்துமாவினால் அவதியுறுபவர்களின் நலனுக்காக வெளியிடப்பட்டது.



எங்கள் குமாரன் சிரஞ்சீவி T. R. ஸ்ரீநிவாசனுக்கும் சௌபாக்யவதி விஜயவல்லிக்கும் நடைபெற்ற திருமணத்துக்கும், வரவேற்புக்கும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்ற பிரமுகர்களுக்கும், உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் எங்கள் இதயம் கனிந்த அன்பையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இதை ஒவ்வொருவருக்கும் தனித்தனியாகத் தெரிவித்ததாக ஏற்றுக்கொள்ள வேண்டுகிறோம். வணக்கம்.

இப்படிக்குத் தங்கள்

**ஸ்ரீமதி ருக்மணி ராகவன் & G. S. ராகவன்**

*Director:* Deccan Safety Glass Works, (P) Ltd., Athipet, Madras-53. *Manufacturers & Suppliers of* Flat Toughened Glass for Automobiles Rly. Coaches and multifarious purposes.

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான
**ஹெடன்ஸா**
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
— ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

பண்டிட்
D. கோபாலாசார்லுவின்

# பால ப்ராஸ

**குழந்தைகளுக்கு ருசியான டானிக்**

*1898 ஆண்டிலிருந்து பிரசித்தி பெற்றது...*

**ஆயுர்வேதாஸ்ரமம்**
பிரைவேட் லிமிடெட்

# இவ்வளவு அமோக விளைச்சலுக்கு உதவியது எது?







## புத்திசாலியான விவசாயி விவேகமாகத் தேர்ந்தெடுத்த ஒர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்

**விஷயமறிந்த விவசாயிகள் பெஸ்ட் அண்ட் கம்பெனி தயாரிக்கும் நம்பகமான ஒர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்டுகளையே கேட்டு வாங்குகிறார்கள்.**

ஈடு இணையற்றது என்று புகழ் பெற்ற 'மானோபிளாக்' பம்பு செட்டுகள் உட்பட பலவகை சென்டிரிப்யூகல் பம்புகளையும் பெஸ்ட் அளிக்கிறது. ஒர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்டுகள் கண்டிப்பான தரக்கட்டுப்பாட்டுடன் தயாரிக்கப்படுபவை. விற்பனைக்குப் பிறகும் சேவை செய்ய, நாடெங்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், தக்க பம்புகளை தேர்ந்தெடுப்பதற்கு ஆலோசனைகளையும் அளிக்கிறது, பெஸ்ட்!

Focus.BC. 192 Tam(a)





**பெஸ்ட் & கம்பெனி பிரைவேட் லிட்.**

(ஸ்தாபிதம் : 1879)
13/15, நார்த் பீச் ரோடு, சென்னை-1

தமிழ் நாட்டிலுள்ள கிளைகள்:

6/434, திருச்சி ரோடு, கோயமுத்தூர்
49-D, மதுரை ரோடு, திருச்சி-1.



# முதல் கேஸ்!

ஆ. சுவாமிநாதன்

சங்கர் யாரை எதிர் பார்த்துக் கொண்டிருந்தானோ அவரைத் தவிர மற்றவர்க ளெல்லாம் வந்து போய்க் கொண்டிருந்தனர். 'சங்கர் கிளினிக்' அன்றுதான் ஆரம்பம். டாக்டருக்குப் படித்துப் பாஸ் செய்து ஒரு பிரபல டாக்டரிடம் இரண்டு வருடங்கள் இருந்த பின்னர் தனியாகவே 'பிராக்டீஸ்' செய்ய ஆரம்பித்தான் சங்கர். சங்கரின் அப்பாவுக்குப் பெருமை பிடிபடவில்லை. 'டிஸ்பென்ஸரி'க்கு வருபவர்களை யெல்லாம் உபசரித்துக்கொண்டிருந்தார். சங்கரின் நண்பர்கள் எல்லோரும் காலை முதலே தொடர்ந்து வந்து அவனைப் பாராட்டிச் சென்றார்கள்.

எல்லோரும் வந்தார்கள். அவன் எதிர் பார்த்தவரைத் தவிர.

அவன் எதிர்பார்த்தது, முதல் நாளிலேயே தன்னைத் தேடி ஒரு நோயாளி வரவேண்டு மென்றுதான்.

நாழிகை ஆகஆகச் சங்கருக்குத் தானே முதல் நோயாளியாக ஆகிவிட்டது போல் தலைவலி மண்டையைப் பிளந்தது.

மணி எட்டு அடித்தது.

''டாக்டர், டாக்டர்'' என்று குழந்தைக் குரல் ஒன்று கேட்டது. எழுந்திருந்து பார்த்தான். ஐந்து அல்லது ஆறு வயது இருக்கும். பெண் குழந்தை ஒன்று உள்ளே வந்தது. அழுது அழுது கண் மை கரைந்து வழிந்திருந்தது. அவள் கையில் பெரிய பை ஒன்று வைத்திருந்தாள்.

சங்கர் கேட்டான்: ''ஏன் அழுகிறாய்? யாருக்காவது உடம்பு சரியாக இல்லையா?''

''ஆமாம், டாக்டர்! நீங்கள்தான் சரிப் படுத்த வேண்டும்'' என்று சொல்லி அவள் ஓவென்று அழுதாள்.

''அழாதே'' என்று சங்கர் அவளைச் சமாதானப்படுத்தினான்.

''என் குழந்தை நீலாவுக்கு உடம்பு சரியில்லை, டாக்டர்!''

''என்ன, உன் குழந்தைக்கா?''

''ஆமாம். நேற்று மாடியிலிருந்து கீழே விழுந்து விட்டாள். கால் முறிந்து போய் விட்டது. அதோடு ராத்திரி முழுவதும் ஜுரம்.'' தான் கொண்டு வந்திருந்த பெரிய பையிலிருந்து ஒரு பெரிய 'செலுலாய்ட்' பொம்மையை எடுத்தாள் அவள்.

சங்கர் அவள் முகத்தைக் கவனித்தான். அந்தக் குழந்தை தன் பொம்மையைத் தன் சொந்தக் குழந்தையாகப் பாவித்து, வெகு ஜாக்கிரதையாக எடுத்தது.

சங்கர் அவள் முகத்தில் தேங்கியிருந்த துக்கத்தைக் கவனித்தான். கணப் பொழுதில் அவனும் அந்தப் பொம்மையை ஒரு நோயாளியாகவே கண்டான்.

''டாக்டர்! குழந்தைக்கு இஞ்செக்ஷன் வேண்டாம். அவளுக்கு ரொம்ப வலிக்கும்.''

''நீ கவலைப்படாதே. நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்று ஆறுதல் சொன்னவன், பொம்மையின் காலைச் சேர்த்திருந்த ரப்பர் விட்டுப் போயிருந்ததைக் கவனித்தான்.

அந்தப் பொம்மையை மேஜையின் மீது கிடத்தினான். உள்ளேயிருந்து ரப்பர்த் துண்டு எடுத்து வந்து அதன் காலை உடலுடன் இணைத்தான். கவலையே உருவாக அந்தக் குழந்தை கவனித்துக் கொண்டிருந்தது. தன் கையிலிருந்த கைக்குட்டையால் அதன் முகத்தில் காற்றுக்கு விசிறியது.

அந்த அமைதியான சூழ்நிலையில், தன் குழந்தைக்கு அடிபட்டு ஓடோடி வந்திருக்கும் தாயைப் போல அவள் நிற்க அவள் துயரத்தைப் புரிந்து கொண்ட டாக்டர் தன் முகமெல்லாம் வியர்வை பொடிக்க அந்தப் பொம்மைக்கு, அல்ல, அல்ல; அந்தச் சின்னஞ்சிறு குழந்தைக்குக் காலில் 'பாண்டேஜ்' போட்டுக் கொண்டிருந்தான்.

'பாண்டேஜ்' போட்டு முடிந்தது.

''இதோ பார், உன் குழந்தையைச் சரிப் படுத்திவிட்டேன்'' என்று உற்சாகமாகச் சங்கர் அவளிடம் சொன்னான். பொம்மையைத் தூக்கிப் போட்டுப் பிடித்தான்.

அளவில்லாத சந்தோஷத்துடன் அவள் பொம்மையை வாங்கிக் கொண்டாள். அன்புடன் அதன் மீது முத்தம் சொரிந்தாள்.

''டாக்டருக்கு தாங்க்ஸ் சொல்லு கண்ணு'' என்று சொல்லிவிட்டு, ''நான் போய் வருகிறேன், டாக்டர்!'' என்று புறப் பட்டாள் குழந்தை.

சங்கரன் மனமெல்லாம் நிறைந்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

வாசல்வரை சென்றவள் மறுபடியும் திரும்பி வந்தாள். ''டாக்டர்! நேற்று அம்மா சொல்லிக்கொண்டிருந்தாள், டாக்டருக்கு 'ஃபீஸ்' கொடுத்தால்தான் வியாதி சரியாகப் போகுமென்று. இந்தாருங்கள். என் குழந்தை நீலாவுக்கு வைத்தியம் பார்த்ததற்கு'' என்று சொல்லி, சங்கரிடம் நாலணா நாணயம் ஒன்றைக் கொடுத்தாள்.

சங்கர் மெய்சிலிர்த்தான். ★

**Prestige**

"பிரஸ்டீஜ்"
பிரஷர் குக்கர்கள்
விற்பனையில் முதலிடம்
வகிக்கின்றன

# ஏனெனில் அவை வாழ்நாள் முழுவதும் பயன்படக்கூடிய அமைப்பைப் பெற்றது




"பிரஸ்டீஜ்" பிரஷர் குக்கர் பாதுகாப்பானது கையாள்வதற்கு சுலபமானது. மூடவும் திறக்கவும் எளிமையானது. தீப்புண்கள், கொதி நீர் மற்றவைகளால் விபத்துக்கள் நேரக்கூடிய வாய்ப்பில்லை. இன்றுவரை 6 லட்சம் இல்லங்களில் உபயோகிக்கப்படுகிறது.

உங்கள் குடும்பத்திற்காக 5 மாடல்களில் ஏதாவது ஒன்றை தேர்ந்தெடுப்பீர்! "பிரஸ்டீஜ்-பிரீத்" வாடிக்கையாளர் பாரதமெங்கிலுமுள்ள "சர்வீஸ் சென்டர்கள்" மூலம் திருப்திகரமான, முழுமையான சேவையை உடனுக்குடனே எப்பொழுதும் பெறலாம்.

"பிரஸ்டீஜ்" குக்கர்கள் விற்பனையில் முதலிடம் வகிப்பதற்கு பல காரணங்கள் உண்டு.



**Prestige**

நீங்கள் ஏழே நிமிடங்களில் "பிரீத் ஸ்டீம் இட்" மூலம் 12, 14, (அ) 26 மிருதுவான இட்லிகளைத் தயாரிக்கலாம்.
மேலும் "பிரீத்-ஸ்பெஷல் பர்பஸ் ஃசாஸ் பேன்", மற்றும் "மல்டி பர்பஸ் ஸ்கில்லெட்" பாத்திரங்களையும் பாருங்கள்.



**இலவசம்:** உங்கள் சௌகரியத்திற்கென, அதிகப்படியாக ஒரு ப்ளக், பிண்டில் மற்றும் சமையற்கலைப் புத்தகம் ஒன்றும் நீங்கள் வாங்கும் ப்ரெஸ்டீஜ் பிரெஷர் குக்கரின் அட்டைப் பெட்டி ஒவ்வொன்றிலும் பேக் செய்யப்பட்டுள்ளன.

தயாரிப்பவர்கள்:
**டி.டி. (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர் 16**

## சூடான பதில்

"ஒரு பெண் பிரதமராக இருப்பது கடினமான காரியமா?" என்று இஸ்ரேல் பிரதமர் திருமதி கோல்டா மீரைக் கேட்டபோது அவர் சொன்னது: "எனக்குத் தெரியாது. ஏனென்றால் நான் ஆணாக இருந்தது கிடையாது" என்றார் அவர்.

ஆதாரம்: ஸ்டேட்ஸ்மேன்     தகவல்: "பாபு"

---

"பணம் வட்டமாக இருக்கிறது எதற்காகத் தெரியுமா? இடம்விட்டு இடம் மாற-செலவழிப்பதற்காகத்தான். தெரிந்துகொள்." - செலவாளி நண்பன் சொன்னான்.

"அது தான் இல்லை. இருபுறமும் தட்டையாக இருப்பதே அதை ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கிச் சேர்த்து வைப்பதற்குத் தானாகும்." கஞ்சன் விளக்கினான். - தேஜ்





"வயதானவர்களைப் பராமரிக்கும் விடுதி ஒன்று ஆரம்பித்திருக்கிறோம். அதற்குத் தாங்கள் உங்களால் இயன்றதைக் கொடுத்து உதவவேண்டும்."

"ஆகா! இப்போதைக்கு மாமியாரை அனுப்பிக் கொடுக்கிறேன். மாமனார் ஊரில் இல்லை. அவர் வந்தவுடன் அவரையும் அனுப்பி வைக்கிறேன்!"

- விஜயம்

★

இதயத்தில் நேர்மை இருந்தால் குணத்தில் அழகு இருக்கும்; குணத்தில் அழகு இருந்தால் வீட்டில் இனிமையான ஒற்றுமை இருக்கும்; வீட்டில் இனிமையான ஒற்றுமை ஏற்பட்டால், நாட்டில் ஒழுங்கு இருக்கும்; நாட்டில் ஒழுங்கு ஏற்படும்போது உலகில் அமைதி நிலவும்.

- 'கன்பூசியஸ்' - அனுப்பியவர்: இரா- நி.

★ ★

மரத்தினாலான வீடுகள் எளிதில் தீப்பிடிக்காமலிருக்க வர்ணம் பூச்சு அடிப்பது இப்போது சாத்தியமாகி இருக்கிறது. பிரிட்டனில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள இந்த வர்ணம் பூச்சு சூடேறியதும் தீப்பற்றாத வாயுவை வெளிப்படுத்துகிறது. இதனால் தீ பரவுதல் தடுக்கப்படுகிறது. பலவித வர்ணங்களில் இந்தத் தீப்பிடிக்காத 'பெயிண்ட்'கள் தயாராகின்றன. தொழிற்சாலைகளில் 'வெல்டிங்' போன்ற காரியங்களும் வர்ணம் பூசுதலும் அருகருகே நடைபெறலாம், தீப்பற்றாத வர்ணங்களைப் பயன்படுத்தினால்.

பி. ஐ. எஸ்.

★

"வாழ்க்கை என்பது ஒரு வண்டி போல. கணவனும் மனைவியும் அதன் இரு சக்கரங்கள். இரண்டும் சேர்ந்து ஒன்றே போல உருண்டால் தான் வாழ்க்கை வண்டி சுலபமாய் ஓடும்."

"அது சரிதான், ஆனால் ஒரு சக்கரம் சைக்கிள் சக்கரமாகவும் இன்னொன்று டிராக்டர் சக்கரமாகவும் இருந்தால் என்ன செய்வது ?"

-- "சுபாஷ்"





அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சி ஸ்தாபனமான 'நாசா' (NASA) ஒரு புதுவித பால் பாயிண்ட் பேனா கண்டுபிடித்திருக்கிறது. இது சுமார் நூறு ஆண்டுகள் வரை எழுதிக் கொண்டே இருக்குமாம்.

"ஸயன்ஸ்" - பாபு

---

## பார்லிமெண்ட் மொழி

"எங்கு முதியவர்கள் இல்லையோ, அது ராஜ்ய சபை அல்ல; யார் துணிவுடன் நினைத்ததைப் பேசவில்லையோ, அவர்கள் முதியோர் அல்ல; எந்தப் பேச்சில் உண்மை (சத்தியம்) இல்லையோ அது துணிவல்ல; மற்றவர்களை ஏமாற்றச் செய்வது எதுவோ அது சத்தியமல்ல."

"மக்கள் சபை"யின் இப்படிப்பட்ட இலக்கணம் மகாபாரதத்தில் வருகிறது. புதுடில்லி நாடாளுமன்றத்தில் "லிஃப்ட்"டின் அருகில் இதை எழுதி யிருக்கிறார்கள்.

தகவல்: கலி. சம்பத்குமார்     ஆதாரம்: 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'

# பிலிப்ஸ் TL ப்ளூரஸன்ட் லாம்ப் ஏன் வாங்க வேண்டும்? இதோ 5 சிறந்த காரணங்கள்




1. எல்லா ப்ளூரஸன்ட் லாம்புகளும் வாங்கும் போது பிரகாசமாகவே இருக்கும். ஆனால் உபயோகிக்க உபயோகிக்க அவை ஒளி குன்றிவிடும். உபயோகிக்கும் காலம் முழுவதும் நிறைந்த ஒளி தருபவையே சிறந்த லாம்புகள். பிலிப்ஸ் லாம்புகளில் பிரகாசம் குன்றுவது மிகச் சிறிதளவே. அதோடு ஆரம்பத்திலும் பிலிப்ஸ் லாம்புகள் அதிக ஒளியைத் தருபவை. உதாரணமாக ஒரு 40 வாட் பிலிப்ஸ் லாம்ப் பிரதி வாட்டிற்கு 70 லூமன்களுக்கும் மேலாக ஒளி தருகிறது.

2. ஒரு ப்ளூரஸன்ட் லாம்பின் பிரகாசம் அதிகரிக்க அதிகரிக்க, நிறங்களை மாறுதலின்றிக் காட்டும் அதன் சக்தி குறைந்துவிடும் என்பது விஞ்ஞான ரீதியிலான உண்மை. பிலிப்ஸ் "கூல் டேலைட்" லாம்புகள், சிறந்த ஒளி, நிறங்களை மாறுதலின்றிக் காட்டும் சக்தி இரண்டையுமே பெற்றிருக்கும்படி பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டவை. அதிகப் பிரகாசமான லாம்ப் தேவையென்றால் பிலிப்ஸின் 'வொயிட் லாம்ப்' வாங்குங்கள்.

3. பிலிப்ஸ் TL ப்ளூரஸன்ட் லாம்புகளினால் ரேடியோ பாதிக்கப்படாது. ஏனெனில் இவற்றை டிஸைன் செய்யும் பொழுதே இப்பிரச்சினை தீர்க்கப்பட்டிருக்கிறது. மேலும் பிலிப்ஸ் ஸ்டார்ட்டர்களில் உள்ள ஒரு விசேஷ அமைப்பு எல்லா ஓசைகளையும் சப்தங்களையும் நீக்கி விடுகிறது.

4. பிலிப்ஸ் லாம்புகள் இந்தியாவின் மிகச் சிறந்த, தன்னிறைவு பெற்ற தொழிற்சாலையில், உலகின் உயர்ந்த தரங்களுக்கேற்பத் தயாரிக்கப்படுகின்றன. அவை பெரிய அளவில் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. எனவே அவற்றின் உயர்தரம் உத்திரவாதம் நிறைந்தது.

5. ப்ளூரஸன்ட் லாம்புகளுடன் பிலிப்ஸ் TL ஸ்டார்ட்டர்களையும் சோக்குகளையும் உபயோகித்தால் நீடித்த உழைப்பும் நிறைந்த ஒளியும் பெறலாம்.

## பிலிப்ஸ் TL ப்ளூரஸன்ட் லாம்புகள்

சீரான ஒளிக்கு இவற்றைவிடச் சிறந்தவை கிடையாது

# பிலிப்ஸ்




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

# தம்பி, தப்பா நினைக்காதீங்க!

**வ**ண்டி ஓடிக் கொண்டிருந்தது. போட்டி போட்டுக் கொண்டு எண்ண அலைகளும் கூடத்தான் வையாபுரி பிள்ளையின் மனம் முழுதும் ஓடிக் கொண்டிருந்தன.

"சே, சே, என்னதான் நாகரிகத்தைக் கரை கண்டவங்கன்னு பேசிக்கிட்டாலும், அதுக்காக ஒரு பொம்பளே, ஆம்பிளையைக் கைதொட்டு அடிக்கிறா; அதுவும் பட்டப் பகலிலே! யாரும் எதுவும் கேட்காமல் அவங்க அவங்க வேலையைப் பார்த்துக்கிட்டுப் போறாங்களே! என்ன அநியாயம்!" மனத்துக்குள்தான் புழுங்கிக் கொண்டிருந்தார் வையாபுரி. வெளியே யாரிடமும் சொல்லவே பிடிக்கவில்லை.

வையாபுரிபிள்ளைக்கு ஒரு நிரந்தர வருத்தம். ஏதோ வளர்ந்து ஓர் ஐம்பது வயதைக் கடந்து விட்டாரே தவிர, உலக ஞானமே தமக்குச் சிறிதளவும் இல்லை என்பதுதான் அது. பிறந்தது முதல் கிராமவாசியாகவே வாழ்ந்து விட்டார் அவர். அவருக்குத் தெரிந்து, ஒருத்தொருத்தர் எப்படியெல்லாமோ முன்னுக்கு வந்து விட்டனர். ஆனால் அவருக்கு இந்தப் பொல்லாத நேர்மையைத் தவிர, வேறு எதுவுமே தெரியாது, புரியாது. பிழைப்புக்காக பலசரக்குக் கடை ஒன்று வைத்து நடத்தி வந்தார் அவர். வியாபாரத்தை முன்னிட்டு மூன்று மாதங்களுக்கு ஒரு முறையாவது சென்னைக்கு வருவார் அவர். ஒவ்வொரு முறையும் ஊர் திரும்பும் போது, குடும்பத்தினருக்காக ஏதாவது பொருள்களை வாங்கிக் கொண்டு, அத்துடன் இப்படிச் சம்பந்தமில்லாத ஏதாவது ஒரு விஷயத்தையும் மனத்தில் சுமந்து செல்வது அவருடைய வழக்கம்.

சென்னை நகரில் வசிப்பவர்களில் பெரும்பாலோர் அழகாக இருப்பதாகவும், பெண்கள் நாகரிகத் தேவதைகளாக மின்னுவதாகவும் ஓர் எண்ணம் அவருக்கு. தம் தலைமுறை தான் கர்நாடகமாகப் போய் விட்டது. அடுத்த தலைமுறையாவது நாகரிகத்தில் திளைக்க வேண்டும் என்பது அவர் உள் அவா. ஆனால் வெறும் ஆசைதான் அது. நிறைவேற்ற முடியாத இந்த ஆசையைத் தவிர்க்கத்தானே, என்னவோ, அடிக்கடி செல




மயிலை மூர்த்தி

லைப் பார்க்காமல் சென்னைக்கு வந்து, கடற்கரை, மியூஸியம் — இப்படி மக்கள் கூடும் இடங்களையெல்லாம் வலம் வந்து மனத்தைத் தேற்றிக் கொள்வார் அவர்.

ஆனால், இவ்வளவு நாட்களாக அவருடைய நன்மதிப்பைப் பெற்றிருந்த சென்னை நகரின் பெயருக்கு ஓர் இழுக்கு ஏற்பட்டு விட்டது. அந்தச் சம்பவத்தை அவ்வளவு சுலபத்தில் மறக்கத் தயாராக இல்லை அவர்.

அன்று பெண்ணிடம் அடிபட்ட அந்த இளைஞன், அந்தக் குறுகிய நேரத்தில் அவர் மனத்தில் நன்கு பதிந்துவிட்டான். ஆஜானுபாகுவான சரீரம்; 'கட்' மீசை; கோட்டும் சூட்டும் போட்டிருந்தான். அவள் மட்டும் என்ன! இருவருமே செல்வந்தர் வீட்டுப் பிள்ளைகள். கையில் துணி மூட்டை மாதிரி ஏதோ ஒன்று வைத்திருந்தான் அவன். அதே துணிக் கடைக்குள்தான் வையாபுரிப்பிள்ளையும் நுழைந்து கொண்டிருந்தார். பேசிக் கொண்டே வந்த அந்த இருவருக்காகவும் வழி விட்டு, வியப்புடன் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தார் அவர். அந்தச் சமயத்தில்தான் அது நடந்து விட்டது. அந்தப் பையன் என்ன சொல்லித் தொலைத்தானோ, கடை வாசலுக்கு வந்தவுடன், அந்த இளைஞன் கன்னத்தில் ஓங்கிப் 'பட்' என்று ஓர் அறை கொடுத்தவள் வேகமாகச் சென்று காரில் ஏறிவிட்டாள். காரும் புறப்பட்டு விட்டது.

வையாபுரிக்கு மீசை துடித்தது. ''என்யா நீ ஆம்பிளைதானா'' என்று அந்தப் பையனைக் கேட்கலாமென்றால், முகத்தைத் துடைத்துக் கொண்டவன், எதுவுமே நடக்காதது போல், மெதுவாக நடந்து சென்று விட்டான். வையாபுரியின் துடித்த மீசை அடங்க வெகு நேரமாயிற்று. சிச்சீ, என்ன ஊரையா இது; நியாயம் கேட்க ஆளே கிடையாதா ? — வேதனையுடன் கடைக்குள் போகாமலேயே திரும்பி விட்டார் வையாபுரி.

ஊருக்குத் திரும்பியவர் எப்படியோ மூன்று மாதங்களை ஓட்டி விட்டார். சென்னைக்கு வரவேண்டிய வேலைகள் எதுவும் இல்லை. இடையில் கண்காட்சி சாலையை முன்னிட்டுக் குடும்பத்துடன் ஒரு முறை சென்னை வந்தவர், இப்போது மறுமுறை தனியாக வந்திருந்தார். அரை நாள் கால் கடுக்க நடந்து, விட்டுப்போன கடைகளையெல்லாம் பார்த்து விட்டார். மறு நாள் ஊருக்குக் கிளம்ப வேண்டியதுதான்.

மவுண்ட்ரோட் பக்கம் பஸ்ஸில் வந்து கொண்டிருந்தார் பிள்ளை. அவர் கண்களில் அந்தப் பாழும் துணிக் கடை பட்டுவிட்டது. கூடவே என்றோ நடந்த அந்தச் சம்பவமும் நினைவுக்கு வந்து விட்டது. இரண்டு நாட்களாகப் பெருமிதத்துடன் சென்னை நகரை வலம் வந்து கொண்டிருந்தவர் மனத்தில் மறுபடியும் கலக்கம் ஏற்பட்டது.

மாலை நேரம். கடலையைக் கொறித்த வாறு கடற்கரை மணற் பரப்பில் உலவிக் கொண்டிருந்த வையாபுரியின் கண்கள், வியப்பால் அகல விரிந்தன. கண்களை ஒரு முறை மூடித் திறந்தார் வையாபுரி. சந்தேகமே இல்லை; அதே நபர்தான். கரையோரம் அமர்ந்து, சிகரெட் ஒன்றைப் புகைத்தபடி எதிரே பரவியிருந்த நீர்ப் பரப்பைப் பார்த்த வாறு அமர்ந்திருந்தான் அந்த இளைஞன். மகிழ்ச்சியுடன் ஒரு விநாடி துள்ளிக் குதித்த வையாபுரி, மறு விநாடி தம்மைச் சமாளித்துக் கொண்டு, முகத்தில் கோபத்தை வரவழைத்துக் கொண்டார். அவனை அணுகும் போது, அந்தக் கோபமும் மாறிக் குழைவுதான் ஏற்பட்டிருந்தது அவரிடம். மெதுவாக அந்த இளைஞன் அருகில் சென்று அமர்ந்தவர் அவனிடம் பேச்சை ஆரம்பித்தார்.

''தம்பி, உங்களை ஒன்று கேட்பேன் ; கோபிக்க மாட்டீங்களே'' என்று ஆரம்பித்தார். வையாபுரியின் முகத்திலிருந்த அப்பாவித் தன்மை அந்த இளைஞன் மனத்தில் இரக்கச் சிந்தனையைத் தூண்டியிருக்க வேண்டும். ''ஓ, தாராளமாகக் கேளுங்க, பெரியவரே !''

வையாபுரிக்கு உச்சி குளிர்ந்து விட்டது. அவரைப் 'பெரியவரே' என்று சென்னை பாஷையில் அழைத்து விட்டானே! மேல் துண்டால் முகத்தை ஒரு முறை துடைத்துக் கொண்டார் வையாபுரி.

''நீங்க தவறாக நினைக்கக் கூடாது தம்பி. கொஞ்சம் சங்கடமான விஷயம். மனசிலேயே நிக்குது. நீங்கதான்னு நிச்சயமா தெரியும். எனக்கு அப்போ எவ்வளவு கோவம் வந்திச்சு தெரியுமா? நானே போய் ரெண்டு வச்சுடலாம்னு பார்த்தேன். போகட்டும், புருஷன் பெஞ்சாதி விஷயம்னு விட்டு விட்டேன். இருந்தால்கூட மனசு கேட்கலே தம்பி; ஏன் அப்படி நடந்துகிட்டீங்க?''

வியப்போடு அவரைப் பார்த்தான் அந்த இளைஞன். தயக்கத்தோடு அந்தச் சம்பவத்தைத் தாம் கண்டபடியே விவரித்தார் பிள்ளை. சிந்தனையில் ஆழ்ந்தான் அந்த இளைஞன்.

''ஆமாங்க, அன்னிக்கு அப்படி நடந்திடுச்சு. என்ன செய்யலாம்?'' என்றவாறு அவர் முகத்தைப் பார்த்தான். வியப்பு மேலிட அவனையே பார்த்துக் கொண்டிருந்தார் பிள்ளை.

''எனக்குப் புரியலீங்க. அப்போ, இந்த ஊருக்குன்னு சட்ட திட்டம், நியாயம் எல்லாம் வேறேங்களா?''—சிரித்தான் இளைஞன்.

''உங்களுக்கு என்னுடைய அந்தச் சொந்த விஷயத்தைப் பற்றித் தெரிஞ்சுக்கணும். எப்படியும் சொல்லாட்டா விடமாட்டீங்க!''

தலையை ஆட்டினார் வையாபுரி.

''அப்போ உங்களை நான் ஒண்ணு கேட்டுக்கறேன். நீங்க இப்போ என் கூடவே வந்துடணும். இன்று இரவு முழுவதும் என்னுடன் இருக்கணும். வர்றீங்களா?''

சற்றுத் தயங்கினார் பிள்ளை.

''என்ன யோசிக்கிறீங்க ?''

நான் ஒண்டிக் கட்டைதானே என்பது நினைவுக்கு வரவே, ''சரிங்க, வரேன்'' என்று தலையாட்டினார் பிள்ளை.

வெடுக்கென்று எழுந்த அந்த இளைஞன் காலில் செருப்பை மாட்டிக் கொண்டான். மணலில் அவன் நடைக்கு ஈடு கொடுக்க முடியாமல், தட்டுத் தடுமாறித் தொடர்ந்து வந்தார் பிள்ளை. சாலையில் நிறுத்தியிருந்த காரை நெருங்கியவன் பின் ஸீட் கதவைத்

திறந்துவிட்டு, "ஏறுங்கள்" என்றான். பயபக்தியோடு ஏறி உள்ளே அமர்ந்தார் பிள்ளை. இளைஞன் தானே வண்டியை ஓட்ட ஆரம்பித்தான். எதுவுமே பேசாமல் அவன் செய்கைகளைத் தொடர்ந்து கவனித்து வந்தார் பிள்ளை.

ஒரு பெரிய ஹோட்டல் முன்னால் சென்று நின்றது அந்தக் கார். காரை விட்டு இறங்கியவன் பின் கதவைத் திறந்து விட்டான்.

எல்லாச் சௌகரியங்களும் நிறைந்த பெரிய ஹோட்டல் அறை அது. அங்கு பரவியிருந்த மங்கலான விளக்கொளி தம்மை எங்கோ அழைத்துச் செல்வது போல் உணர்ந்தார் அவர். தொடர்ந்து அறையில் நுழைந்த 'வெயிட்ட'ரிடம் "இரவு இரண்டு சாப்பாடு இங்கேயே அனுப்பிவிடு. இப்போ ஸ்ட்ராங்கா இரண்டு கப் காப்பி உடனே அனுப்பு" என்று கூறிய அந்த இளைஞன் அவர் பக்கம் திரும்பி "சார், பெரியவரே, சௌகரியமாக உட்காருங்க. இதோ காப்பி வந்துவிடும். இரவு சாப்பிட்டுவிட்டு மறுபடியும் வெளியே போக வேண்டியிருக்கும். கொஞ்சம் 'ரெஸ்ட்' எடுத்துக்குங்க" என்று கூறி முடிப்பதற்குள் பையன் காப்பியுடன் உள்ளே நுழைந்து விட்டான். அவர் எதிரிலேயே மற்றொரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தான் அந்த இளைஞன்.

"சாப்பிடுங்க சார்."

"இல்லீங்க, ரொம்பச் சங்கடமா இருக்குங்க எனக்கு வேண்டாமுங்க. நான் யாரையும் பார்க்க மாட்டேன். நீங்க எதுவுமே சொல்ல வேண்டாம். நான் போறேனுங்க"—

பலமாகச் சிரித்தான் அந்த இளைஞன்.

"என்ன இப்படிப் பயப்படறீங்க. நான் கூட வெளியூர்தான். ஆனால் மாதக் கணக்கில் இந்த ஹோட்டலில்தான் வாசம்."

"வீட்டிலே கோவிக்கக் கிட்டேங்கன்னு இங்கே வந்திடுவீங்களா? ஏன் தம்பி, உங்களுக்குக் கூட மெட்ராஸ் புடுச்சிருக்குங்களா?" வெகுளியாகக் கேட்டார் பிள்ளை.

"அப்படித்தான் வச்சிக்குங்களேன். பார்க்கப்போனா என்னை மெட்ராஸ் பிடிச்சுக்கிட்டு இருக்குது. நீங்க காப்பியைச் சாப்பிடுங்க, தைரியமா."

எதுவுமே பேசாமல் சாப்பிட ஆரம்பித்தார் பிள்ளை. தொடர்ந்து இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு அறையைப் பூட்டிக் கொண்டு கிளம்பினான் இளைஞன். பெரியவரும் தொடர்ந்தார். கீழே கார் தயாராகக் காத்திருந்தது.

நேரம் போகப் போக வையாபுரி பிள்ளைக்குத் தாம் தெரிந்து கொள்ள வந்த விஷயத்தின் மீது அக்கறை குறைந்துகொண்டே வந்தது. ஏதோ பெரிய மோசடியில் தாமாகவே சிக்கிக் கொள்வது போல் உணர்ந்தார் அவர். வேதனையோடு அருகிலிருந்த இளைஞனை ஒரு முறை பார்த்தார். அவன் கம்பீரமாக வெளியே பார்த்துக் கொண்டிருந்தான். அந்த மங்கிய விளக்கொளியில் கூட அவன் எவ்வளவு அழகாக இருந்தான்!

ஓடிக் கொண்டிருந்த கார் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட ஒரு பிரம்மாண்டமான கட்டிடத்தின் முன்னால் நிற்கிறது. அது ஒரு சினிமாக் கொட்டகை என்பதைப் புரிந்து கொள்ளவே அவருக்கு வெகு நேரமாகிறது.

"எதுக்குங்க இப்போ சினிமா எல்லாம்?"

"பரவாயில்லே சார்! நீங்க இன்று முழுவதும் என் விருந்தாளி. என் இஷ்டப்படி தான் நடக்கணும். பேசாமல் வாங்க." அங்கேயும் மாறுதான்.

இருளைக் கிழிக்கொண்டு பரவிய டார்ச் விளக்கின் ஒளிக் கீற்றின் உதவியால் அவர்கள் இருவரையும் உட்கார வைக்கிறார் தியேட்டர் ஆள். உள்ளே ஒரே கும்மிருட்டு. தாங்க முடியாமல் குளிர் வேறு. தான் எங்கோ மிதப்பது போல் உணர்கிறார் வையாபுரி. சில விநாடிகளுக்குப் பிறகுதான் சூழ்நிலையே புரிய ஆரம்பிக்கிறது. உள்ளே சிவப்பு விளக்குகள் ஆங்காங்கே பளிச்சிடுகின்றன. எதிரே படம் ஓடிக் கொண்டிருக்கிறது. தம்மைச் சுற்றி ஒரு முறை பார்க்கிறார் அவர். எங்கு பார்த்தாலும் தலை மயம். அவர் சினிமா பார்த்து ஆண்டு எப்போதாவது. ஆனால் இவ்வளவு வசதிகளை அனுபவித்ததே இல்லை. 'என்ன இருந்தாலும் மெட்ராஸ் நல்ல மெட்ராஸ் தான்.' சூழ்நிலையை ஒருவாறு அனுபவித்து விட்டு மனத்தைப் படத்துக்குள் ஈடுபடுத்துவதற்குள் இடைவேளை வந்து விட்டது. அது வரை அவர் அருகில் அமர்ந்திருந்த அந்த இளைஞன் "நான் கொஞ்சம் வெளியே போய் விட்டு வருகிறேன்" என்று கிளம்பி விட்டான்.

ஐந்து நிமிட இடைவேளைக்குப் பிறகு மறுபடியும் விளக்குகள் அணைந்து படம் ஓட ஆரம்பிக்கிறது. படத்தில் கவனம் செலுத்தி வரும் வையாபுரி திடுக்கிடுகிறார். அவர் காண்பதென்ன? இதோ மௌண்ட் ரோட், அதோ அந்தத் துணிக் கடை. அடேடே இதோ அவரே இருக்கிறாரே. அந்தப் பெண், ஆம், அவளேதான். 'பட்'டென்று அறை விடுகிறாள். எல்லாமே படத்தில் வருகின்றனவே! அதே இளைஞன்தான். இதோ அவர் அருகிலேயே அமர்ந்திருக்கிறான்.

"தம்பி, தம்பி, நீங்க ஒரு..." பக்கத்தில் திரும்பியவர் திடுக்கிடுகிறார். இடம் காலியாக இருக்கிறது.

"தம்பி, தம்பி, சார், எங்கே இருக்கீங்க?" வையாபுரி வெளியே கிளம்பி விட்டார். பாதி ஆட்டத்தில் வெளியே போகும் அவரை எல்லோரும் விநோதமாகப் பார்க்கிறார்கள். தியேட்டரை விட்டு வெளியே வந்தவர், "ஐயா, வண்டியில் ஏறுங்க" என்ற குரல் கேட்டுத் திரும்புகின்றார். "வேண்டாம்பா, எனக்கு எதுவும் வேண்டாம்."

"இல்லீங்க, ஐயா சொல்லி யிருக்காங்க, உங்களைப் பத்திரமாகக் கொண்டு போய் உங்க வீட்டில் சேர்த்து விடணும்னு." பேசாமல் வண்டியில் ஏறி அமர்கிறார் அவர். அவர் தங்கியிருந்த விடுதியை நோக்கிப் பறக்கிறது அந்தக் கார்.

மறு நாள்.

முடிவில்லாதது போல் தோன்றிய அந்த வண்டித் தொடரைப்போல் எண்ண அலைகள் மனம் முழுதும் வியாபிக்க, ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்தார் வையாபுரி பிள்ளை. ஆனால் இப்போது அவர் சுமந்து சென்றது சென்னையைப் பற்றிய இன்ப நினைவுகள்தான்.




சென்னை மாவட்ட நூலகங்களுக்கெல்லாம் திங்கட்கிழமை விடுமுறை. சென்னை மாவட்ட மத்திய நூலகத்துக்கும் திங்கட்கிழமை விடுமுறை. நாங்கள் வசிக்கும் பகுதியிலுள்ள ரானடே லைப்ரரிக்கும் திங்கட்கிழமை விடுமுறை. இப்படி எல்லாமே திங்கள் விடுமுறை. கிளை நூல் நிலையங்கள் விடுமுறை நாளில் ஒரு மணிநேரம் வாசகர்கள் தினசரி பேப்பர்களைப் படிப்பதற்கெனத் திறந்திருந்தால் நல்லது. இந்த முறை திருச்சி, தஞ்சை மாவட்டங்களில் பின்பற்றப் படுகின்றன.

சென்னை-4
3-11-69 என். சுப்பிரமணியம்

நான் பள்ளி இறுதி வகுப்பில் படிக்கும் மாணவன். ஒரு நாள் பள்ளி விடுமுறையின்போது பன்னிரண்டரை மணி அளவில் வானொலியைத் திருப்பும்போது 'இப்போது மாணவர்களுக்கான கல்வி ஒலிபரப்பு. இன்று ஏழாம் வகுப்புக்குரிய பாடம் நடைபெறும்' என்ற அறிவிப்புக் கேட்டேன். ஆனால் பெரும்பாலும் எல்லாப் பள்ளிகளும் பிற்பகல் ஒரு மணிக்குத்தான் தொடங்குவதால் மாணவர்கள் யாரும் இதைக் கேட்க இயலுவதில்லை. பள்ளிகளிலும் மாணவர்கள் இக்கல்வி ஒலிபரப்பைக் கேட்பதற்கு வாய்ப்பளிப்பதில்லை. இக்கல்வி ஒலிபரப்பு மாணவர் எல்லாருக்கும் பயனளிக்க வேண்டுமெனில் அந்நிகழ்ச்சி காலை ஒன்பது மணிக்குள்ளாகவோ அன்றி மாலை 5 மணிக்கு மேல் 9 மணிக்குள்ளாகவோ இருப்பின் அது நமது நாட்டின் எதிர்காலச் சந்ததியினராகிய எங்களுக்குப் பயனளிக்கும். பிற்பகல் பன்னிரண்டரைக்கு மேல் ஒரு மணிக்குள் இருப்பது விழலுக்கிறைத்த நீர் போலாகும்.

திருவாரூர்.
19-12-69 ச.க.சபாபதி

**பெட்டிக்குள் உள்ள கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.**

கடந்த வாரம் காசநோய் நிவாரணத்துக்கு நிதி சேமிக்கும் வகையில் கிராம உத்தியோகஸ்தர்கள், ஆசிரியர்கள் முதலானோர் அதற்கான ஸ்டாம்புகளை விற்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர். அவர்கள் விற்றாலும் விற்காவிட்டாலும் அவர்களின் மாத வருமானத்திலிருந்து பிடித்து விடுகிறார்கள். இந்த நிலைமை மிகவும் வருந்தத் தக்கது. ஆசிரியர்களாவது பள்ளியில் படிக்க வரும் மாணவர்களிடம் அவற்றைக் காட்டி விற்று அவர்கள் மூலம் நிதி திரட்ட வழியுண்டு. கிராம உத்தியோகஸ்தர்கள் யாரிடம் போய் அவற்றை விற்க முடியும்? ஏழை விவசாயிகளிடமா விற்க முடியும்? இத்துடன் என்னால் விற்க முடியாத பத்து ஸ்டாம்புகள் உள்ளன.

பேட்டூர் அணை,
18-1-70 மெ. வ. கிருஷ்ணசாமி

சிறு சேமிப்புத் திட்டத்தில் பணத்தைச் சேமியுங்கள். 4 சதவீதம் வட்டி கிடைக்கும் என்று அரசு ஆணை கூறுகிறது. ஆனால் நடைமுறையில் நடப்பதோ முதலாண்டில் பெற்ற பத்திரங்களை மறு ஆண்டில் அரசுக் கடனாகப் பெற்றுக் கொண்டு புதிய பத்திரங்களைக் கொடுக்கிறார்கள். ஆண்டுதோறும் இதேபோல் நடக்கிறது. பத்திரங்கள் வாங்குவோருக்கு வட்டி கிடைக்காமலே போய்விடுகிறது. மேலும் பஞ்சாயத்துக்களில் உள்ள பணத்தை பி. டி. ஓ. (B.D.O.) ஆயிரக்கணக்கில் எடுத்துக் கொண்டு சிறு சேமிப்புப் பத்திரங்களாகக் கொடுத்து விடுகிறார். பஞ்சாயத்துக்கும் ஆண்டுதோறும் வட்டி நஷ்டம். அதோடு ஊர்களுக்குச் செய்யக் கூடிய வேலைகளைச் செய்ய முடியாமலும் போய்விடுகிறது.

மேலும் சிறு சேமிப்பு வசூலுக்கு ஆகும் செலவைத் தாசில்தார், பி. டி. ஓ. கலெக்டர், மற்றும் அதிகாரிகள் (போக்குவரத்து பெட்ரோல் செலவு முதலானவை) அனைவரும் அந்தந்த இலாக்காவில் கணக்கெழுதிக் கொள்கிறார்கள். ஆகமொத்தம் கணக்குப் பார்த்தால் சிறு சேமிப்பு வசூலிப்பதால் யாருக்குமே நன்மையைக் காணோம். பஞ்சாயத்துக்கும் நஷ்டமே.

திப்பம்பட்டி
30-1-70
க. சென்னையா

தஞ்சை மாவட்டத்தில் நிலங்களை வைத்துக் கொண்டு - சென்னையில் வேலை செய்யும் என் போன்ற ஆயிரக் கணக்கானவர்கள் அரிசி கொண்டு வர அனுமதி வாங்க அலைந்திட வேண்டிய நிலைமையை உருவாக்கி விட்டது அரசாங்கம். ரேஷன் கார்டையும் பழைய பர்மிட்டையும் காண்பித்து இரண்டு நாட்களில் சிவில் சப்ளை ஆபீசில் சுலபமாக பர்மிட் வாங்கிக் கொண்டிருந்தோம். இனி கிராமக் கர்ணம் - ரெவின்யூ இன்ஸ்பெக்டர் - சில்லறைத் தேவதைகள் இவர்களைத் திருப்திப் படுத்தாமல் பர்மிட் வாங்குவது இயலாத காரியம். அத்துடன் ஒவ்வொரு தடவையும் சென்னையிலிருந்து தஞ்சை சென்று பர்மிட் வாங்க வேண்டும். சாகுபடி செய்பவர்கள் நமக்காகத் தஞ்சை சென்று அலைந்து பர்மிட் வாங்க முடியுமா? அதற்கான படிச் செலவு என்று எங்கள் தலையில்தான் கட்டுவார்கள்.

இப்பொழுது வழங்கி வந்தது போல் சென்னையில் பர்மிட் வழங்குவதில் என்ன கஷ்டம் இருக்கிறது? சென்னையிலும் பர்மிட் வழங்கலாம் என்ற முறையைக் கொண்டு வந்து அரசாங்கம் எங்கள் கஷ்டங்களைப் போக்குமா?

சென்னை-6
6-2-70 இராம. தண்டபாணி

சேர வாரீர் சிறுவர் சிறுமியரே!!

# நியூட்ரின்

# வண்ணப் போட்டி

துவங்கிவிட்டது

• கீழே காணும் வயதுப் பிரிவுகளுக்கு மட்டுமே

'A' பிரிவு — 4 முதல் 7 வயது வரை
'B' பிரிவு — 8 முதல் 10 வயது வரை
'C' பிரிவு — 11 முதல் 14 வயது வரை

501
அரும் பெரும்
பரிசுகள் பெற
அரிய
வாய்ப்பு

3
முதல்
பரிசுகள்:



தலை ரூ. 501
ரொக்கம்

9
இரண்டாவது
பரிசுகள்:



'பிலிப்ஸ்'
பியெஸ்டா
சைக்கிள்கள்

45
மூன்றாவது
பரிசுகள்:



'பிலிப்ஸ்'
விக்ரம்
டிரான்ஸிஸ்டர்கள்

99
நான்காவது
பரிசுகள்:



'ரகின்'
மூன்லாண்டர்
பிளாஸ்குகள்

மற்றும் 345 ஆறுதல் பரிசுகள்



பிரவேச
நமூனாக்களைப்
பெற உங்கள்
கடைக்காரரை
உடனே
அணுகுங்கள்!




தின்னத்
தின்ன
திகட்டாத
மிட்டாய்

28 பிப்ரவரி 1970
முடிவு தேதி: ~~31 ஜனவரி 1970~~

நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி பிரைவேட் லிமிடெட், சித்தூர் (ஆந்திரா)

# உட்புறங்களுக்கும், வெளிப்புறங்களுக்கும் ஈடிணையற்ற அழகிற்கும், நிரந்தரத்தன்மைக்கும்...

**ஸில்விக்ரீட்**
ஏஸிஸி வெள்ளை சிமெண்ட்





**ஸில்விக்ரீட் ஏஸிஸி** வெள்ளை சிமெண்டை கண்கவர் பாணிகளிலும், வண்ணங்களிலும் அமைத்துக் கொள்ளலாம்; அதைக் கொண்டு டெகோரேடிவ் பேனல்களையும், டைல் அல்லது டெர்ரஸோ தரைகளையும், ஜாலிகளையும், கொடிவிடுகளையும் சுலபமாக அமைத்துக் கொள்ளலாம்.

அசல் போர்ட்லாந்து சிமெண்டின் உறுதியும், நீடித்து நிற்கும் தன்மையும் உடையதாக இருப்பதனால், அது நிரந்தரமானதாக விளங்குகிறது.

**ஸில்விக்ரீட்** எவ்வளவு வேண்டுமானாலும், அருகிலுள்ள சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட் கிளையிலோ, அவர்களுடைய விநியோகஸ்தர்களிடமோ கிடைக்கிறது.

**ஸ்னோஸெம்** மற்றும் **கலர்க்ரீட்டின்** தயாரிப்பில் மூலப் பொருளாக இருப்பது **ஸில்விக்ரீட்.**

***ஏஸிஸி*** தரத்தில் உயர்ந்த தயாரிப்புகளுக்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

**தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனிஸ் லிமிடெட்.**

**தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்.**

SISTA'S-CM-437 TM

## கடுமையான சுளுக்கிலிருந்து விரைவில் குணமடைந்தேன்!

# அமிர்தாஞ்சனம்

## மிக உதவியது

அமிர்தாஞ்சனம் சுளுக்கு, ஜலதோஷம், தலைவலி, தசைவலி இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள். 75 வருடங்களாக குடும்பங்களில பயன்பட்டுவரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம். எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். அதுசிக்கனமான ஜாடிகளிலும், கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கிறது.




***10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி***

அமிர்தாஞ்சன் லிமிடெட், சென்னை - பம்பாய்-கல்கத்தா - புதுடில்லி - ஹைதராபாத் - பெங்களூர்



# ஐந்தே காசு போதும்

# உங்கள்

# குடும்பம்

# பெருகாமல்

# தடுக்க!



நிரோத் உபயோகியுங்கள். ஆண்கள் சுலபமாக உபயோகிக்கக்கூடிய உயர்தர ரப்பரினாலான இக் கருத் தடைச் சாதனம் எளிமையானது, திறமையானது. நிரோத் இப்பொழுது நாடெங்கிலும் கிடைக்கிறது.

**உங்கள் குடும்பம் பெருகாமல் தடுக்கும் சக்தி உங்களிடமே இருக்கிறது.**

இப்பொழுது
நாடெங்கிலும்
கிடைக்கிறது

**15 காசுக்கு 3**

அரசாங்க ஆதரவினால்
குறைந்த விலை

# நிரோத்

உபயோகியுங்கள்



**உயர்தர ரப்பரினாலான
கருத்தடைச் சாதனம்
ஆண்களுக்கானது**

வீட்டுச் சாமான்கள், மருந்து,
சிகரெட் விற்கும் கடைகளில்
கிடைக்கும்.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput Madras-31
Managing Editor T. Sadasivam

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon